# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'
நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

வாழ்க்கையில் அன்பு என்பது நம்மோடு ஒட்டி இருக்க வேண்டும். நம் அருமையான உயிர் உடலில் ஒட்டி இருப்பது போல அன்பும் நம் வாழ்க்கையோடு ஒட்டி இருக்க வேண்டும். இதனையே வள்ளுவரும்,

அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு

எனக் கூறியுள்ளார்: எனவே அன்பு உயிருக்கு சமம். அதனைப் பேணிப் போற்றுவோமாக.

ஆசை மனிதனை விடாது. அதுவும் தனியாக வாழ்பவனையும், வீடு வாசலை விட்டு வெளியேறியவனையும், பிச்சை எடுப்பவனையும், முற்றும் துறந்தவனுக்க் காணப்படுபவனையும் அது விடாமல் பற்றிக் கொள்ளத்தான் செய்கிறது. இப்பொருளே இந்த வடமொழி சுலோகத்தின் கருத்து.

ஏகாகீ நிருகசந்தியக்திஹி
பாணிபாத்ரோ திகம்பரஹ
ஸோபி சம்வாப்யதே லோகே
திருஷ்ணுய பஸ்ய கௌதுகம்.

மதிமுகம்: 64 ஜூன் 1979 புன்னகை: 6

தனிப் பிரதி: ரூ. 1—25 வருட சந்தா: ரூ. 15—00






**அசோக் மங்கசூலி, அடோனி (கர்நாடகம்)**

கேள்வி : வால் நட்சத்திரம் என்றால் என்ன ?

பதில் : சூரிய மண்டலக் கூட்டம் என்பதில் கிரகங்களும் உபக்கிரகங்களும், எரி கட்டிகளும், வால் நட்சத்திரங்களும் உள்ளன. இவை நெடுந் தூரத்திலிருந்து சுற்றியவாறே சூரியனை அணுகி மீண்டும் விலகிச் செல்கின்றன. சூரியனருகே வரும் போது இவற்றிற்கு 'வால்' இருப்பதை நாம் காண்கிறோம். இவை நட்சத்திரம் போல மின்னி விலகிச் செல்கின்றன. இவற்றிலுள்ள வாயுப் பொருள்கள் சூரிய வெப்பத்தால் விரிவாக இவை தூரத் தள்ளப்படுகின்றன. இப்படிச் செல்லும் எரி கட்டிகளையே நாம் வால் நட்சத்திரம் என்கிறோம்.

**பால். கே. ஜம்பேல்கர், பசீன் (மகாராஷ்டிரம்)**

கேள்வி : மேகம் கருப்பாக இருக்கும் போது அதன் மழை நீர் மட்டும் ஏன் வெள்ளையாக உள்ளது ?

பதில் : நீர் வெள்ளையாக இல்லை. சூரிய வெளிச்சத்தால் மேகத்திலுள்ள நீர்த்திவிலைகள் மற்ற பொருள்களோடு கலந்து கருப்பாகத் தென்படுகிறது. நீருக்கு நிறம் இல்லை.

கேள்வி : மலைகள் எப்படி ஏற்படுகின்றன ?

பதில் : பூமியினடியில் கற்பாறை அடுக்குகள் உள்ளன. அவை அடிக்கடி நகர்கின்றன. இப்படி இரு அடுக்குகள் நகரும் போது அதன் மத்தியிலுள்ள பகுதி நசுக்குண்டு உயர்ந்து வருகிறது. இப்படியே நம் நாட்டில் வரிசையாக ஏற்பட்டு இமயமலை தோன்றியது. இவை இப்படியே இன்னமும் உயர்ந்து கொண்டு போகின்றன. ஒரு காலத்தில் இப்பகுதி தாழ்ந்து கடலடியில் இருந்தது என்பதற்கு இப்போது உயர்ந்து நீர் நிலையங்களைக் கொண்டுள்ள இடங்களில் கடல் வாழ் உயிரினங்கள் இன்றும் இருப்பதே சான்றாகும். இவ்வாறு பூமியின் கீழ் பாறை அடுக்குகள் நகர்ந்து உயர்த்தப்பட்ட பகுதி வெயில், மழை, காற்று ஆகியவற்றால் தாக்கப் பட்டு இறுகி மலைகளாகின்றன.



# முன் பின் யோசியாமை

நாவிதன் மணிபத்திரனிடம் தான் கண்டதை யாரிடமும் சொல்வதில்லை என்று சத்தியம் செய்துவிட்டுப் போனான். ஆனால் போகும் வழியில் அவன் ''அடேடே, இந்த ரகசியம் இவ்வளவு நாட்களாக எனக்குத் தெரியாமல் போய் விட்டதே. ஒரு ஜைனமுனியை குண்டாந்தடியால் அடித்துக் கொன்றால் அவர் தங்க விக்கிரகமாக மாறி விடுகிறாரே. பேஷ் பேஷ். நான் சில ஜைன முனிவர்களை என் வீட்டிற்கு அழைத்து வந்து அடித்துக் கொல்கிறேன். அவர்களெல்லாம் தங்க விக்கிரகங்களாக மாறி விடுவார். பிறகு என் பாடு யோகந்தான். இந்த வியாபார ரகசியம் இப்போதுதான் எனக்குத் தெரிந்தது. வியாபாரிகள் தம் ரகசியத்தை லேசில் சொல்ல மாட்டார்கள். அது போலத்தான் மணிபத்திரனும் இதை ரகசியமாக வைத்திருக்கக் கூறி எனக்கும் கொஞ்சம் தங்கம் கொடுத்திருக்கிறான்'' என எண்ணிக் கொண்டான்.

நாவிதன் மறுநாளே பல குண்டாந்தடிகளை வாங்கித் தன் வீட்டில் வைத்தான். பிறகு அதிகாலையில் அவன் ஜைனமுனிவர்கள் வரும் மகாவீரர் ஆலயத்திற்குப் போய் மகாவீரரின் விக்கிரகத்தை வணங்கினான். பிறகு ஜைனமுனிவர்களின் தலைவராக உள்ளவரிடம் போய் ''ஐயா. தாங்கள் தங்களது சகஜைனமுனிவர்களுடன் என் வீட்டிற்கு விஜயம் செய்து நான் அளிக்கும் விருந்தைச் சாப்பிடவேண்டும்'' என்றான்.

அதற்கு அவர் ''சன்னியாசிகளான எங்களுக்கு எதற்கப்பா விருந்து? நாங்கள் பிராம்மணர்



களைப் போல சாப்பாட்டுராமன் களல்ல. எங்களுக்குப் பசி எடுத்தாலே நாங்கள் கிருகஸ்தர்களின் வீட்டிற்குப் போய் அவர்கள் கொடுக்கும் உணவை ஏற்று எங்கள் உடம்பைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய அளவிற்கே புசிப்போம். எனவே எங்களைக் கட்டாயப்படுத்தாதே. எங்களுக்குத் தேவைப்படும் போது உணவை உன்னிடம் வந்து கேட்டு வாங்கி உண்டு களிக்கிறோம்'' என்றார்.

நாவிதனோ ''நீங்கள் கூறுவது முற்றிலும் சரியே. ஆனாலும் என் வீட்டில் ஏகப்பட்ட துணிமணிகள் இருக்கின்றன. பணமும் இருக்கிறது. அவற்றை உங்களிடம் சமர்ப்பித்தால் நல்லவிதமாக எல்லோருக்கும் பயன்படும். பல புத்தகங்களைப் தயாரித்து எல்லோருக்கும் கொடுக்கலாம். நீங்கள் ஏற்க மறுத்தால் வேறு ஜைன முனிவர்களைத் தேடிப் போக வேண்டியது தான்'' என்றான்.

அதைக் கேட்டு அக் கூட்டத்திலிருந்த ஆறு ஜைனமுனிவர்கள் ''நாங்கள் வருகிறோம். நீயோ பொதுமக்களுக்கு உதவவேண்டும் என்ற நோக்கத்தோடு எங்களுக்கு உன்னிடமுள்ளவற்றைக் கொடுப்பதால் அவற்றை ஏற்றுக் கொள்கிறோம். பிறருக்கு உதவுவதற்கு ஒரு அரிய வாய்ப்பு கிடைக்கும் போது அதனை இழந்து விடக் கூடாது. எனவே நாங்களே உன் வீட்டிற்கு வருகிறோம். நீ வேறு ஜைன முனிவர்களைத் தேடிப் போக வேண்டியதில்லை" என்றனர்.

இவர்கள் சன்னியாசிகளாம்! முற்றும் துறந்தவர்களாம். கமண்டலத்தைக் கையிலேந்தி பிக்ஷை பெற்று உண்பவர்களாம்? இப்படிபட்டவர்களுக்கு பணம் துணிமணி என்றதும் ஆசை வந்து விட்டது. ஆசை யாரைத்தான் விட்டது? ஏதோ ஒரு விதத்தில் எல்லோரையும் அது ஆட்டி வைக்கிறது. கிழவனாகி தலை நரைத்துக் கை, கால்கள் தளர்ந்து நடுங்கினாலும் கூட ஆசை என்பது அவனை விட்டு

அகல்வதில்லை. எனவே ஜைன முனிவர்கள் பணத்தை அடைய ஆசைப் பட்டது கண்டு ஆச்சரியப் பட வேண்டியதில்லையே.

நாவிதன் அந்த ஆறு ஜைன முனிவர்களையும் தன் வீட்டிற்கு அழைத்துப் போனன். அவன் தன் வீட்டின் எல்லாக் கதவுகளையும் மூடித் தாழ்பாள் போட்டான். ஜைன முனிவர்களை ஒவ்வொருவராகக் கூப்பிட்டு தான் வைத்திருந்த குண்டாந்தடியகளை எடுத்து ஓங்கி ஓங்கி அடிக்கலானன்.

ஆனல் ஒரு முனிவர் கூட மணி பத்திரன் அந்த பிக்ஷுவை அடித்த போது சிரித்துக் கொண்டு விழுந்தது போலக் கீழே விழவில்லை. அது கண்டு நாவிதன் திகைத்துப் போனன். அதனல் ஆத்திரம் அதிகரிக்க அவன் பலமாக அந்த முனிவர்களை அடிக்கலானன். அவர்களோ அந்த வீட்டிலிருந்து வெளியேற வழி இல்லாமல் அவனது அடிகளிலிருந்து தப்ப வீட்டிற்குள் அங்குமிங்கும் ஓடலாயினர். தங்கள் உயிருக்கு ஆபத்து எனக் கண்டதும் அங்கும் இங்கும் ஓடி ஒளிந்து அடிகள் தம் மீது படாமல் இருக்கப் பார்த்தார்கள். ஆனல் அப்படித் தப்ப முடியவில்லை. நாவிதனே அவர்களைத் துரத்தி அடி அடி என்று அடித்தான்.



முடிவில் இரு ஜைன முனிகள அடிபட்டு விழுந்தார்கள். அவர்கள் இறந்தார்கள் என எண்ணி அவர்களது உடல்கள் தங்கமாக மாறி விட்டனவா என்று அவன் பார்த்தான். அவை அப்படி மாறுமல் இருக்கவே குண்டாந் தடியால் மற்றவர்களை அடிக்க ஓடினன்.

அந்த பிக்ஷுக்களோ ''எங்களை அடித்துக் கொல்லாதே. நாங்கள் உனக்கு என்ன கெடுதல் செய்தோம்? எங்களிடமிருந்து பிடுங்கி கொள்ள எதுவும் இல்லை. இப்போது எங்களில் இருவரை அடித்துக் கொன்று விட்டாய். எங்களையாவது விட்டு விடு" என்று கெஞ்சி

ஞர்கள். ஓவெனக் கத்திஞர்கள். ஆஞல் சற்றும் இரக்கப்படாமல்

நாவிதனே கோபத்தோடு ''உங்களில் ஒருவன் கூட தங்க விக்கிரகமாக மாறவில்லையே. அந்த பிக்ஷுவைப் போல மரியாதையாகத் தங்க விக்கிரகமாக மாறி விழுங்கள். இல்லா விட்டால் உங்களை லேசில் விட மாட்டேன்'' என்ருன்.

ஆஞல் பிக்ஷுக்கள் போட்ட கூச்சலால் அரசாங்க வீரர்களும் அக்கம் பக்கத்தவரும் அவ்வீட்டின் கதவுகளை உடைத்துக் கொண்டு உள்ளே வந்தார்கள். உள்ளே நடந்த ரகளையையும் நாவிதன் பிக்ஷுக்களை அடிக்க ஓடுவதையும் கண்டார்கள். உடனேயே அவர்கள் அந்த நான்கு பிக்ஷுக்களைக் காப்பாற்றியதோடு நாவிதனைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் நீதிபதி முன் நிறுத்திஞர்கள்.

நீதிபதியும் நாவிதனை விசாரிக்கவே அவன் மணிபத்திரன் செய்ததைக் கூறித் தானும் அது போலவே செய்ததாயும் ஆஞல் ஒரு ஜைன முனி கூட தங்க விக்கிரகமாக மாறவில்லை என்றும் தெரிவித்தான்.

நீதிபதி மணிபத்திரனை வரவழைத்து விசாரித்தார். அவன் தான் கண்ட கனவையும் அதன் பின் அது போல நடந்ததையும் கூறிஞன். அதைக் கேட்ட நீதிபதி ''இந்த முட்டாள் நாவிதனைச் சிறையில் தள்ளுங்கள். பிறகு ஈட்டியால் குத்திக் கொல்லுங்கள். எதையும் சரியாகக் கேட்டு புரிந்து கொண்டு செயல்பட வேண்டும். சரியாகப் புரிந்து கொள்ளாமல் யாராவது செயல் பட்டால் அவன் கதி இதுதான். இதற்கு உதாரணம் ஒரு பிராம்மணன் மிகவும் விசுவாசம் கொண்ட கீரியைக் கொன்ற கதையாகும்'' என்ருர்.

''அதென்ன கதை?'' என்.று மணிபத்திரன் கேட்க நீதிபதியும் அக்கதையைக் கூறலாஞர்.





# காளகக் கரடிராயன்

## 11

[உதயபுர மன்னன் காட்டில் திரிந்து கொண்டிருக்கையில் அவனது சிற்றரசனான வெள்ளி அம்பலம் அவனது கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டு விட்டான். கரடிராயனுக்குத் தன் தலையைத் தருவதற்கு முன் தான் சிம்மாசனத்தில் மீண்டும் அமர வேண்டும் என உதயபுர மன்னன் எண்ணி கரடி மனிதனையும் உலக்கை ராயனையும் அழைத்துக் கொண்டு தன் கோட்டை முன் போய் நின்றான். அப்போது உள்ளே இருந்து சில வீரர்கள் வேகமாக வந்தார்கள். அச்சமயம்—]

ஈட்டிகளையும் வாள்களையும் தூக்கி வரும் குதிரை வீரர்களையும், போர் வீரர்களையும் கண்டு கொள்ளைக்காரர்களின் தலைவனான நாகப்பனும் அவனது இரு ஆட்களும் பயந்தே போனார்கள். உதயபுர மன்னனோடு இருந்த வீரர்களும் தமக்குள் ஏதோ பேசிக் கொள்ளலாயினர். நாகப்பனும் அதற்குள் தன்னைச் சமாளித்துக் கொண்டு ''அடேயப்பா. நம்மைத் தாக்க ஓரேயடியாக இவ்வளவு பேர்கள் வருவார்களென நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால் பயம் வேண்டாம். நம்மைக் காக்கக் கரடிமனிதனும் உலக்கைராயனும் இருக்கிறார்கள்'' என்று தன் ஆட்களிடம் கூறினான்.

அவர்களும் ''அப்படியானால் நாம் திரும்பிப் போய் அவர்



களோடு சேர்ந்து நின்று கொள்ளலாமா?'' என்று கேட்டனர். நாகப்பனோ ''வேண்டாம் வேண்டாம். நான் போட்ட திட்டப்படி நடக்கிறதா என்று பார்ப்போம். முன் வைத்த காலைப் பின் வைக்க வேண்டாம்'' என்றான்.

இதே சமயம் கோட்டைக்குள் இருந்து வந்த வீரர்கள் ''அடே! என்ன சதியாலோசனை செய்கிறீர்கள்? ஓடிப் போய் விடலாம் என்று பார்க்கிறீர்களா? அதுதான் முடியாது'' என்றனர்.

நாகப்பன் சட்டெனத் தலைப்பாகையை எடுத்து விரித்து காற்றில் ஆட்டியவாறே "நண்பர்களே. நில்லுங்கள். நான் முன்னாள் உதயபுர மன்னனைப் பிடித்து வந்திருக்கிறேன். அதற்குப் பரிசாக கணிசமான தொகை கொடுத்தால் அவனை உங்களிடம் ஒப்படைத்து விட்டுப் போகிறோம்'' என்றான்.

அதைக் கேட்டதும் வந்து கொண்டிருந்த வீரர்கள் 'டக்' கென்று நின்றார்கள். குதிரை வீரர்களின் தலைவன் சற்று முன் வந்து ''ஏய். இதில் ஏதாவது மோசடி வேலை இல்லையே. மேலே இருந்து எம் அரசரும் மந்திரியும் வெகு நேரமாக நீங்களெல்லாம் வந்து கொண்டிருப்பதைப் பார்த்து விட்டார்கள்'' என்றான்.

நாகப்பனும் ''அப்படி ஏதாவது துரோகம் செய்ய நினைத்தால் ஒரு சிலருடன் உங்கள் கோட்டைக்கு வருவேனா? முன்னாள் உதயபுர மன்னன் உயிருடன் இருந்தால் அது உங்களுக்கு எப்போதுமே ஆபத்துதானே. நாங்கள் பிடித்த அந்த முன்னாள் மன்னனை உங்கள் அரசர் எங்களுக்குப் பணம் கொடுத்து வாங்கா விட்டால் நாங்கள் இப்போதே அவனோடு காட்டிற்குப் போய் விடுகிறோம்'' என்றான்.

குதிரை வீரர்களின் தலைவன் என்ன செய்வதென்று யோசித்தான். பிறகு அவன் ''அது சரி. நீ யார்? உன் பெயர் என்ன?'' கேட்டான். நாகப்பனும் அவ

னுக்கு அவ்வளவாக மூளை இல்லை என்பதைத் தெரிந்து கொண்டான். அவன் உடனே ''என்னை நாகப்பனூர் என்றே அழைப்பார்கள். காட்டிலுள்ள சிங்கம், புலிகளைப் பிடித்து விற்பதோடு இம் மாதிரிப் பிரமுகர்களைப் பிடித்து பணம் வாங்கிக்கொண்டு ஒப்படைப்பதும் என் தொழில்'' என்றான். உடனே வீரர் தலைவனும் ''சரி, இதை எம் அரசரிடம் சொல்கிறேன். ஆனால் அங்கே நிற்பவர்களில் ஒருவன் ராட்சஸன் போலவும் இன்னொருவன் கரடி மனிதனாகவும் இருக்கிறானே, எல்லாம் வேஷம் போட்டுக் கொண்டா வந்திருக்கிறார்கள்?'' என்று கேட்டான்.

நாகப்பனும் ''இதோ பார். இதெல்லாம் பெரிய இடத்து விவகாரம். இப்படி நடுத் தெருவில் நின்று நீயும் நானும் பேசிக் கொண்டிருக்க முடியாது. பேச வேண்டியவர்களிடம் நான் முறைப்படி பேசிக் கொள்கிறேன். நீ கேட்டால் என் ரகசியத்தை எல்லாம் உடனே நான் சொல்லி விடுவேன் என்று எதிர் பார்க்கிறாயா? அதெல்லாம் முடியாது. எல்லாவற்றையும் நான் உங்கள் அரசரிடம் கூறத்தான் போகிறேன். எனவே அது பற்றி விவரம் அறிய வேண்டுமானால்




உங்கள் அரசரே நேரில் இங்கே வருவது நல்லது. அவரிடமே அந்த முன்னாள் மன்னனை ஒப்படைத்து விட்டு மற்றவர்களையும் அறிமுகப்படுத்தி, பணம் வாங்கிக் கொள்கிறேன்'' என்றான்.

வீரர் தலைவனும் திருப்தி அடைந்தவனாகத் தன் வீரர்களை அங்கேயே இருக்கும்படிக் கூறி விட்டு வெள்ளி அம்பலத்தைக் காணச் சென்றான். கோட்டை மதில் மீதிருந்து எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த வெள்ளி அம்பலம் வீரர் தலைவன் தன்னருகே வந்ததும் ''ஏன் அவர்களைத் தாக்காமல் இங்கே வருகிறாய்?'' என்று கோபத்தோடு கேட்டான்.



வீரர் தலைவனும் நாகப்பன் கூறியதைச் சொல்லி ''ஏதோ பணம் கொடுத்தால் முன்னாள் மன்னனைத் தங்களிடம் ஒப்படைப்பதாக அவன் கூறுகிறான்'' என்றான்.

முன்னாள் மன்னன் உயிருடன் இருக்கிறான் என்றதுமே பயந்த வெள்ளி அம்பலம் ''அவன் காட்டில் ஏதோ ஒரு மிருகத்திற்கு இரையானதாக நம் ஒற்றர்கள் கூறினார்களே. அது பொய்யா?'' என்று கேட்டான்.

அப்போது அவனது மந்திரி ''நாம் அந்த மன்னன் உயிருடன் இருக்கிறான் என்று எப்படி இப்போது நம்புவது? வந்திருப்பவர்கள் எல்லாம் வேஷதாரிகள். ஒருவன் ராட்சஸன் போலவும் இன்னொருவன் கரடிமனிதன் போலவும் வேஷம் போட்டுக் கொண்டு வந்திருப்பதைப் பாருங்கள்" என்றான்.

வெள்ளி அம்பலமும் ''உன்னை நான் தேர்ந்தெடுத்து என் மந்திரியாக நியமித்துக் கொண்டேனே. அது என் கஷ்டகாலம்தான். உனக்கு திறமையே இல்லை. அந்தப் பயல்கள் பத்து பேர்கள் கூட இல்லை. அவர்களிடம் போய் நாம் என்ன பேசுவது? வீரர் தலைவா! அவர்களைச் சூழ்ந்து கொண்டு கட்டிப் பிடித்து இழுத்து வா முதலில்" என்றான்.

''அங்கே இருப்பவன் உண்மையிலேயே ராட்சஸனாக இருந்தால்?'' என்று வீரர் தலைவன் கேட்டான். வெள்ளி அம்பலமும் "அட தொடை நடுங்கி! இவ்வளவுதானா உன் சூரத்தனம்? நானே வருகிறேன். எங்கே என் குதிரை?" என்று உரக்கக் கூவினான்.

மறு நிமிடமே ஒரு வீரன் அவனது குதிரையைக் கொண்டு வந்து நிறுத்தினான். உடனே அதன் மீது பாய்ந்து உட்கார்ந்து கொண்டு வெள்ளி அம்பலம் கிளம்ப அவன் பின்னாலேயே மற்றொரு குதிரை மீது அமர்ந்து மந்திரியும் சென்றான். வீரர் தலைவனும் அவர்களோடு சென்றான். அவர்கள் வருவதைக் கண்டதுமே நாகப்பன்

உற்சாகத்தோடு ''ஆகா. நான் போட்ட திட்டம் நிறைவேறி விட்டது. ராஜா, மந்திரி, படைத் தலைவன், ஆக எல்லோருமே நம்மிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டார்கள்'' என்று தன் ஆட்களிடம் கூறினுன். சற்று நேரத்திற் கெல்லாம் வெள்ளி அம்பலம் நாகப்பனின் முன் வந்து நின்றுன்.

அவன் நாகப்பனிடம் ''அடே. நீ கூறியதையெல்லாம் எம் படைத் தலைவர் எம்மிடம் கூறினுர். என்னுேடா பேரம் பேச வந்திருக்கிருய்? மறு பேச்சுப் பேசாமல் அங்கே நிற்பவர்களை யெல்லாம் நீ போய் அழைத்து வா. கோட்டைக்குள் அழைத்துப்போய் உனக்கும் அவர்களுக்கும் நல்ல பரிசு கொடுக்கிறேன். முன்னுள் மன்னனின் தலையை என்ன செய்வது என்று பிறகு யோசிக்கலாம்'' என்றுன்.

நாகப்பன் இதைச் சற்றும் எதிர் பார்க்கவில்லை. வெள்ளியம்பலம் தன் எதிரி இவ்வளவு எளிதாகக் கிடைத்து விட்டானே என்று மகிழ்ந்து தான் கேட்கும் பணத்தைக் கொடுக்க முன் வருவான் என்றும் அப்போது நயமாகப் பேசி மாட்டவைக்கலாம் என்றும் அவன் யோசித்தே அப்படி ஒரு திட்டம் தீட்டிப் செயல் படுத்தவும் இறங்கினுன். திட்டம் பாதி



வெற்றி கண்டது. முழு வெற்றியும் கிடைக்கப் போகிறது என்று எண்ணிய போது இப்படி திடீரென இடி விழுவது போல இந்த வெள்ளியம்பலம் நாராசச் சொற்களை அள்ளி வீசுகிருன். படுபாவி! கொஞ்சமாவது இவனுக்கு மூளை இருக்கிறதா என்ன?

ஆனுல் நாகப்பன் தான் போட்ட திட்டம் தவிடு பொடியாகி விட்டதைக் கண்டான். அவனுக்கு முன்னுள் மன்னனிடமோ அல்லது தற்போதைய மன்னனுன வெள்ளி அம்பலத்திடமோ எவ்விதப் பற்றுதலோ அல்லது வெறுப்போ இல்லை. ஆனுல் வெள்ளி அம்பலம் மட்டும் கரடிமனிதனுேடோ அல்



லது உலக்கைராயனே டோ தக ராறு செய்தால் ஒரே சண்டை தான் ஏற்படும். அப்படி ஒரு சண்டை ஏற்படுவதை அவன் விரும்பவில்லை.

இதற்குள் முன்னுள் மன்னனின் வீரர்கள் தம் யானை மீதிருந்த வாறே ''உதயபுர மன்னர் வாழ்க்! துரோகி வெள்ளி அம்பலம் வீழ்க!" என்று கத்தினுர்கள். பிறகு அவர் கள் ''அடே வெள்ளி! நீ இன்றே எமலோகம் போகப் போகிருய். இங்கே இருக்கும் கரடிமனிதரும் உலக்கைராயரும் உன்னை ஒரே ஊதாக ஊதித் தள்ளி விடுவார் கள்'' என்று கூறினுர்கள். தொலைவிலிருந்து தன்னை வீழ்க என்று சில வீரர்கள் கத்தியது கேட்டு வெள்ளி அம்பலம் கோபம் கொண்டான். தன்னருகே நின்ற மந்திரியிடமும் படைத் தலைவனிட மும் அவன் ''வேஷக்காரர்களின் ஆட்டத்தை முடிவிற்குக் கொண்டு வரலாம். உடனே நம் வீரர்களை அனுப்பி இவர்கள் எல்லாம் தப்பி ஓடிவிட முடியாதபடி சுற்றி வளைத்துக் கொள்ளச் சொல்'' எனக் கூறியவாறே நாகப்பன் அமர்ந்திருந்த யானையைத் தாக் கப் போனுன்.

இப்படி ஏதாவது நடக்கும் என எதிர்பார்த்த நாகப்பன் சட்டென தன் யானையைத் திருப்பி ஓட்டிக் கொண்டு போய் உலக்கைராய னும் கரடிமனிதனும் நின்ற இடத்தை அடைந்தான். அவர் களிடம் அவன் ''என் திட்டம் குலைந்து விட்டது. வெள்ளி அம் பலம் நம்மைத் தாக்கத் தன் வீரர் களை அனுப்புகிருன்'' என்ருன்.

அப்போது வெள்ளி அம்பலத் தின் மந்திரி வேகமாகத் தன் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்த நாகப்பனை பின் தொடர்ந்த வாறே ''அடே! எங்களை ஏமாற்ற பார்த்தீர்களா? உங்கள் தலைகளை யெல்லாம் பனங்காய் சீவுவது போலச் சீவித் தள்ளப் போகிருேம் தெரியுமா?'' என்று உரத்த குர லில் வெறி பிடித்தவன் போலக்

கத்திஞன். அதைப் பொருட் படுத்தாமல் படைத்தலைவன் தன் வீரர்களை அனுப்பி வைத்தான். வெள்ளி அம்பலமும் மந்திரியும் படைத் தலைவனும் முன்னேறிச் சென்று கரடிமனிதனும் உலக்கை ராயனும் நின்ற இடத்தை அடைந் தார்கள்.

வெள்ளி அம்பலத்தைப் பார்த்த துமே உதயபுரத்து முன்ஞள் மன் னன் ''அடே வெள்ளி! நான் இல் லாத நேரம் பார்த்து என் கோட் டையைப் பிடித்துக் கொண்டு விட் டாயா? உன் தலையை வெட்டி எறிகிறேன் பார்'' என்று தான் ஏறி இருந்த யானை மீதிருந்து குதித் துக் கீழே நின்ருன்.

அதைக் கண்ட கரடிமனிதன் ''சபாஷ்டா சிங்கம்! காட்டிலே ஒரு புலியைக் கண்டு ஓடிய இவன் இப்போது தன் கோட்டையும் சிம் மாசனமும் பறி போனது கண்டு ஆத்திரப்படுகிருன். பேஷ். பேஷ்" என்ருன்.

வெள்ளி அம்பலத்திற்கு முன் ஞள் உதயகிரி மன்னனைப் பார்த் ததும் ஆத்திரமும் கோபமும் வந்து விட்டது. ஏனெனில் அவன் ஒழிந் தான், இனி தானே அந்நாட்டின் மன்னன் என எண்ணி மகிழ்ந்திருந் தான். அந்த மகிழ்ச்சி மின்னல் போல மறைவது கண்டு அவ னுக்கு ஆத்திரம் வருவது இயல்பு



தானே! எனவே அவன் சற்று தூரத்தில் நின்ற முன்ஞள் மன்ன னையும் அவனேடு வந்திருப்பவர் களையும் ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தான்.

கீழே நின்ற முன்ஞள் மன்னனைப் பார்த்து வெள்ளி அம்பலம் "ஓகோ நீ இன்னும் உயிரோடு இருக்கி ருயா? உன்னை உயிரோடு வைத் திருப்பதே தப்பு. இதோ உன் தலை துண்டித்து விழப் போகிறது பார்'' என்று கூறித் தன் வாளை எடுத்துக் கொண்டு குதிரையை அவன் பக்கம் ஓட்டினன். அப் போது கரடிமனிதனின் முன் இருந்த வேடன் வெள்ளி அம் பலத்தின் மீது ஒரு அம்பை எய்

தான். அம்பு வெள்ளி அம்பலம் ஏறியிருந்த குதிரையின் நெற்றியில் படவே அது தன் இரு முன்னங் கால்களையும் உயரத் தூக்கியது.

குதிரை மீதிருந்து உருண்டு விழப் போன வெள்ளி அம்பலம் ஒரு வாறாக சமாளித்துக் கொண்டு அதன் மீது நன்கு உட்கார்ந்தான். இதற்குள் உதயபுரத்து முன்னாள் மன்னன் மந்திரியை ஒரு குத்துக் குத்திக் கீழே தள்ளி விட்டு அவன் ஏறி இருந்த குதிரை மீது ஏறிக் கொண்டு வெள்ளி அம்பலத்தைத் தாக்கப் போனான்.

தான் அகப்பட்டுக் கொள்ள வேண்டி வருமோ என்று பயந்த வெள்ளி அம்பலம் தன் குதிரையைத் திருப்பிக் கோட்டையை நோக்கிச் செலுத்தலானான். அவன் பின்னால் உதயபுர முன்னாள் மன்னன் தன் குதிரையைச் செலுத்திய வாறே ''அடே பயங்கொள்ளி வெள்ளி! நில்லடா! எங்கே ஓடுகிறாய்?'' என்று உரக்கக் கத்திய வாறே அவனைத் துரத்திச் சென்றான். அதைக் கண்ட கரடிமனிதனும் உலக்கைராயனும் ''இந்த இரண்டு பேருமே மன்னர்களாக இருக்கத் தகுந்தவர்களா? ஒருவன் காட்டில் ஒரு சாதாரணப் புலியைப் பார்த்து நடுங்கினான். மற்றவனோ எதிரியை 'அடிப்பேன்' 'உதைப்பேன்' என்றெல்லாம் வீராப்பு பேசி விட்டு சமயம் வந்த போது பின் வாங்கி கோட்டைக்குள் ஓடிப் பதுங்குகிறான்! பேஷ்! பேஷ்!! நல்ல உதயபுரி! நல்ல ராஜாக்கள்! இவர்களிடம் மக்கள் அகப்பட்டுக் கொண்டு என்ன பாடு படுகிறார்களோ என்று நினைத்துப் பரிதாபப்பட வேண்டியிருக்கிறது. இப்போது ஒருவன் மற்றவனைத் துரத்திக் கொண்டு கோட்டைக்குள் போயிருக்கிறான். உம். பார்ப்போம் என்னதான் நடக்கிறது என்று'' எனத் தமக்குள் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

(தொடரும்)





# ஏன் விடுதலை?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, இவ்வுலகில் குற்றம் புரிவோருக்கு தண்டனை கிடைப்பதில்லை. இதற்கு உதாரணமாக நீலன் என்ற திருடனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

வஞ்சிபுரம் என்ற ஊரில் நீலன் என்ற பகல் திருடன் இருந்தான். அவன் பட்டப்பகலில் கடைகளிலும் சத்திரங்களிலும் போய் பிறர் கண்ணில் படாமல் எப்படியோ திருடி வந்து விடுவான். அவன்

**வேதாளம் சொல்லும் கதை**



தான் திருடன் என்பது கூட யாருக்கும் தெரியாது. அவ்வூர் காவலதிகாரியோ அவனை எப்படிப் பிடிப்பது என்று தெரியாமல் தவித்தான். அவன் திருடும் போது கையும் மெய்யுமாகப் பிடிக்கலாம் என்றால் அவன் எப்படித் திருடுகிறான் என்பதே தெரியவில்லை. அவனை யாருமே பார்த்ததும் கிடையாது. அவனது உருவம் எப்படி இருக்கும் என்றும் யாருக்கும் தெரியாது. அவனது அங்க அடையாளங்களும் தெரியவில்லை.

இப்படி இருக்க, ஒரு நாள் நீலன் நடுத்தெருவில் ஒரு மனிதனின் பணப்பையைத் திருடி விட்டான். அதில் பணத்தோடு ஒரு கடிதமும் இருந்தது கடிதத்தில் ''அண்ணா, என் கணவர் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறார். நீ இப்போது பண உதவி செய்தால் தான் அவர் பிழைப்பார். எனவே உடனே பணம் அனுப்பு'' என்று மிக உருக்கமாக எழுதப்பட்டிருந்தது.

அந்தக் கடிதத்தைப் படித்த நீலனின் மனம் இளகி விட்டது. அதில் கடிதம் எழுதியவளின் முகவரி இருந்ததால் அவன் கொஞ்சம் பணத்தை எடுத்துக் கொண்டு அவளுக்கு உதவ அவள் வீட்டிற்குப் போனான். ஆனால் அவன் அந்த வீட்டிற்குள் நுழைந்ததுமே அரசாங்க வீரர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவன் முன் பணப்பையை இழந்த பேர்வழி புன்சிரிப்பு சிரித்தவாறு வந்து நின்றான். அப்போது தான் நீலனுக்கு அது தன்னைப் பிடிக்க விரித்த வலை என்பது தெரிந்தது.

அவன் நீதிமன்றத்தின் முன் கொண்டு வரப் பட்டான். நீதிமன்றத்தில் பகல் திருடனைக் காண பெரிய கூட்டம் கூடி விட்டது. எல்லோரும் அந்தப் பகல் திருடனை நன்கு பார்த்தார்கள். நீதிபதி அவனுக்கு கடும் தண்டனையே விதிப்பார் என்று எதிர் பார்த்தார்கள். ஆனால் விசாரணை அதிகாரியான நகரக் காவலதி

காரியோ நீலனுக்கு எவ்வித தண்டனையும் அளிக்காமல், நீலன் இனிமேல் திருடுவது இல்லை என்று சத்தியம் செய்ததன் பேரில் விடுதலை செய்து விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே, வெகுவாகக் கஷ்டப்பட்டுப் பிடித்த நீலனுக்கு காவலதிகாரி கடுந்தண்டனை அளிக்காமல் ஏன் விடுதலை செய்தான்? இக்கேள்விக்குத் தக்க பதில் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் ''பகல் திருடனைப் பிடிக்க காவலதிகாரி அதிக சிரமப் படவில்லையே. திருடன் இரக்க சுபாவம் கொண்டிருந்தான். அதனால் காவலதிகாரி விரித்த வலையில் வீழ்ந்தான். அதனால் இளகிய மனம் படைத்தவனை தண்டிக்கவில்லை. மேலும் நீலனின் விசாரணை பகிரங்கமாய் நடக்க நீலன் யாரென்பது எல்லோருக்கும் தெரிந்து விட்டது பல நாட்களாக திருடன் யாரென்று தெரியாமலே இருந்ததால் நீலன் திருட்டுகளை நடத்த முடிந்தது. இனி அவ்வாறு செய்யமுடியாது. ஏனெனில் விசாரணையின் போது அங்கு கூடி இருந்த மக்கள் எல்லோரும் அவனைப் பார்த்து விட்டார்கள். அவனது உருவம் ஒவ்வொருவர் மனதிலும் நன்கு பதிந்தே இருக்கும். இனி அவன் திருடிக் கொண்டிருந்தால் மக்கள் எப்படியும் பிடித்து விடுவார்கள். எனவே நீலன் தான் இனிமேல் திருடுவதில்லை என்று சத்தியம் செய்ததும் காவலதிகாரி அவனை தண்டிக்காமல் விடுதலை செய்தான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# தண்டனை யாருக்கு?

மகதநாட்டு மந்திரி தனக்குப் பின் தன் பதவியில் அமர்த்த ஒருவனைத் தேர்ந்தெடுக்க முயன்றார். அவர் தலை நகருக்கு வெளியே முகாமிட்டு அப்பதவியைக் கோரி வருபவர்களையெல்லாம் கண்டு கடைசியில் இரு வரைத் தேர்ந்தெடுத்தார். ஒருவன் பெயர் வீரபானு, மற்றவன் பெயர் ஞானபானு.

மந்திரி அவர்கள் இருவரையும் அழைத்து ''நான் ஒரு கடிதம் கொடுக்கிறேன். உங்களில் ஒருவன் இங்கிருந்து தலை நகருக்குப் போகும் வழியில் பாதி தூரத்திற்கு முதலில் எடுத்துச் செல்ல வேண்டும். மற்ற பாதி தூரத்திற்கு மற்றவன் எடுத்துச் செல்ல வேண்டும். கடைசியில் அரச னிடம் கொடுக்க வேண்டும். ஆனால் நீங்கள் யாரும் கடிதத்தைப் பிரித் துப் படிக்கக் கூடாது'' என்று கூறி அனுப்பினார்

இருவரும் கடிதத்தோடு கிளம்பினார்கள். முதல் பாதி தூரத்திற்குக் கடிதத்தை எடுத்துச் சென்ற வீரபானு அதைப் பிரித்து படித்து விட்டு பயந்து போய் ஞானபானுவிடம் அதைக் கொடுத்து விட்டு எங்கோ ஓடிப் போய் விட்டான். ஞானபானுவோ கடிதத்தை எடுத்துப் போய் அரச சபையில் விகடகவியிடம் கொடுத்து அரசனிடம் கொடுக்குமாறு சொன் னான். விகடகவியும் அவ்வாறே செய்தான்.

அரசன் கடிதத்தைப் பிரிக்க அதில் ''இக்கடிதத்தைக் கொடுப்பவனைத் தூக்கில் போடுங்கள்'' என்றிருந்தது. உடனே ஞானபானுவைத் தூக்கில் போட அரசன் கட்டளையிட்டான். ஆனால் ஞானபானுவோ கடிதத்தை அரசனிடம் கொடுத்தவன் தான் இல்லை என்றும் விகடகவியாதலால் அவனைத் தூக்கில் போட வேண்டுமென்று கூறினான். அரசன் அவனது அறிவை மெச்சி அவனையே தன் வருங்கால மந்திரியாக தேர்ந்தெடுத்தான்.






# மன மாற்றம்

கஜசிம்மன் என்ற ஜமீன்தாரரிடம் கந்தன் என்ற வாலிபன் புதிதாக வேலைக்கு அமர்ந்தான். அந்த ஜமீன்தாரர் முன் கோபி. எப்போது பார்த்தாலும் ஏதாவது ஒரு வேலை கொடுத்து வேலையாளைக் கசக்கிப் பிழிந்து விடுவார். சரியாகக் சாப்பிடக் கூட விட மாட்டார். அவரிடம் வேலை பார்த்த பையன்களெல்லாம் கந்தனிடம் ''நீ ஜமீன்தாரரிடம் வேலைக்கு அமராதே. உன்னால் இரண்டு நாட்கள் கூடத் தாக்குப் பிடிக்க முடியாது'' என்று சொல்லிப் பார்த்தார்கள். ஆனால் அவன் கேட்காமல் வேலைக்கு அமர்ந்தான்.

ஜமீன்தாரர் கந்தனையும் மற்ற வேலைக்காரர்களைச் செய்தது போலவே வாட்டி எடுக்கலானார். சாப்பிடவும் தூங்கவும் விடாமல் வேலைகளைச் சொன்னார். கந்தனும் சற்றும் மறுப்பு கூறாமல் புன்சிரிப்பு சிரித்தவாறே அவர் சொன்ன வேலைகளையெல்லாம் செய்து வந்தான். ஜமீன்தாரர் அற்பவிஷயங்களுக்குக் கூட அவனைக் கோபித்துக் கொண்டார். அப்போதும் அவன் எதிர்த்துப் பேசாமல் சிரித்தவாறே சகித்துக் கொண்டான்.

இதையெல்லாம் பார்த்து ஜமீன்தாரின் மனைவி கந்தன் மீது இரக்கப்பட்டாள். இந்தப் பையன் ஏன் இப்படித் தன் கணவனிடம் அடிபட்டும் உதைபட்டும் வசைகளை வாங்கிக் கொண்டும் வேலை செய்ய வேண்டும் என்று எண்ணினாள். தன் கணவனே ராட்சஸ சுபாவம் கொண்டவர் என்றும் தான் அவரை மணந்து கொண்ட காரணத்தால் அவரது கொடுமைகளைச் சகித்துக் கொள்ளவேண்டும்

வேலூர் வேலப்பன்

என்பது அவளது தலையில் எழுதப் பட்ட விதி. ஆனால் இந்தக் கந்தன் ஏன் பொறுத்துக் கொள்ளவேண் டும்! பேசாமல் வேலையை விட்டு விட்டுப் போய்விடலாமே!

கந்தன் முழுமனதுடன் தோட்ட வேலையையோ, வயல் வேலை களையோ வீட்டு வேலைகளையோ செய்து முடிப்பான். இதையெல் லாம் பார்த்துப் பார்த்து மனம் உருகி ஒரு நாள் ஜமீன்தாரரின் மனைவி ''ஏனப்பா கந்தா! உன்னை ஜமீன்தாரர் இவ்வளவு கஷ்டப் படுத்துகிறாரே. திட்டுகிறார், உதைக்கிறார், அடிக்கிறார், எல்லா வற்றையும் பொறுத்துக்கொண்டு சிரித்த முகத்தோடு இருக்கிறாயே. ஏன் இப்படி வேலை செய்கிறாய்! பேசாமல் வேறே எங்கேயாவது போய் விடு. கொஞ்சம் பணம் கொடுக்கிறேன். நல்ல இடமாகப் பார்த்து வேலையில் அமர்ந்து கொள்'' என்றாள். அதைக் கேட்ட கந்தனோ ''அம்மா, நீங்கள் என்னைப் பெற்ற தாயார் போல இருக்கிறீர்கள். ஜமீன்தாரரோ எனக்கு தகப்பனாருக்குச் சமம். அவர் என்னை எவ்வளவு வைதா லும் அல்லது அடித்தாலும் என் மீது அவருக்கு அன்பு இல்லாமல் போய் விடுமா? அவர் செய்வ தெல்லாம் என் நன்மைக்காகத் தான்'' என்றான்.

தன் மனைவியும் கந்தனும் பேசிக் கொண்டதை மறைந்திருந்து கேட்ட ஜமீன்தாரர் தன்னை யாரோ சம்மட்டியால் தாக்குவது போல உணர்ந்தார். தன் மகன் கூட இப்படித் தன்னைப் பற்றிக் கூறமாட்டானே என அவர் மனம் எண்ணியது. அப்போது முதல் அவர் கந்தனைத் தன் மகனைப் போலக் கருதி நடத்தி வந்தார். முன் கோபத்தையும் பிறர் மீது எரிந்து விழுவதையும் விட்டுவிட்டு அவர் எல்லோரிடமும் நல்ல வித மாகப் பழகி எல்லோருடைய அன்பிற்கும் பாத்திரமானார்.






பழனியப்பனிடம் புதிதாக வேலைக்கு அமர்ந்தவன் வேலு. அவன் ஆடுகளை மேய்க்கக் காட்டிற்கு ஓட்டிப் போனான். இருட்டி விட்டது. அப்போதும் அவன் வராதது கண்டு பழனியப்பனின் மனைவி முத்தம்மாள். ''யாரோ உங்கள் நண்பன் சொன்னான் என்று புதுப் பையனை வேலைக்கு வைத்துக் கொண்டீர்கள். அவன் இப்போது நம் ஆடுகளையே ஓட்டிக் கொண்டு எங்கோ போய் விட்டான் போலிருக்கிறதே" என்றாள்.

பழனியப்பனும் ''அவசரப் படாதே. பொறு பார்க்கலாம். என் நண்பன் சிபார்சு செய்தால் நாணயஸ்தனைத் தான் இருப்பான். வேண்டுமானால் நாமும் பரீட்சித்துப் பார்க்கலாம்'' என்றான். இதற்குள் வேலுவும் ஆடுகளை ஓட்டிக் கொண்டு வந்து சேர்ந்தான். அப்போது பழனியப்பன் முத்தம்மாளைப் பார்த்து அர்த்த புஷ்டியுடன் சிரித்தான்.

மறுநாள் வேலுவைப் பரீட்சிக்க பழனியப்பன் வீட்டின் பல இடங்களில் சில்லறைக் காசுகளைப் போட்டு வைத்திருந்தான். ஆனால் வேலு அவற்றில் ஒன்றைக் கூட தொடவில்லை. பழனியப்பன் அதைக் கண்டு திருப்தி அடைந்தானாயினும் தன் மனைவியைத் திருப்திப்படுத்த மேலும் ஒரு பரீட்சை வைத்தான்.

பழனியப்பன் தனக்குத் தெரிந்த ஒரு முஸ்லிம் நண்பனிடம் கொஞ்சம் பணத்தைக் கொடுத்து ஏதோ ரகசியமாகச் சொல்லி அனுப்பினான். அவனும் தலையை ஆட்டி விட்டுப் போனான்.

மறு நாள் காலை வேலு ஆடுகளை ஓட்டிக் கொண்டு காட்டில் மேய்க்

மீனா தங்கராசு

கப் போனுன். அப்போது பழனி யப்பன் அனுப்பிய முஸ்லிம் நண் பன் கந்தனிடம் வந்து ''தம்பீ உனக்கு பத்து ரூபாய் கொடுக் கிறேன். எனக்கு ஒரு ஆட்டைக் கொடுக்கிருயா ?'' என்று கேட் டான். வேலுவோ ''இவை எல் லாம் என் ஆடுகள் அல்ல. என் எஜமான் பழனியப்பன் என்பவர். அவரிடம் பேசி விலைக்கு வாங்கிக் கொள்ளுங்கள்'' என்ருன்.

அதற்கு அந்த முஸ்லீம் ''இன் னும் அதிகமாக விலைகொடுக் கிறேன். ஒரு ஆடு கொடு. போதும்'' என்ருன். வேலு மசியா மல் போகவே விலையைக் கொஞ் சம் கொஞ்சமாக உயர்த்திக் கடை சியில் ஆட்டிற்கு நூறு ரூபாய் கொடுப்பதாகக் கூறினுன்.

வேலுவும் சற்று யோசித்து விட்டு ''சரி கொடுங்கள்'' எனக் கூறி நூறு ரூபாய் வாங்கிக் கொண்டு அவனுக்கு ஒரு ஆட் டைக் கொடுத்தான். அவனும் அதனை ஓட்டிக் கொண்டுபோனுன். அன்று மாலை ஆடுகளை வீட்டிற்கு ஓட்டிச் சென்ற வேலு பழனியப் பனைப் பார்த்து ''இன்று உங்களி டம் கேட்காமல் ஒரு வேலை செய்து விட்டேன். அது தவறு தான். ஆனுல் அதனுல் உங்களுக்கு நல்ல லாபம் கிடைக்கிறதே என்று அவ் வாறு செய்தேன். உங்கள் ஆடு களில் ஒன்றை ஒரு முஸ்லீம் நூறு ரூபாய் கொடுத்து வாங்கிப் போனுர். நானும் அந்த நூறு ரூபாய்க்கு மூன்று ஆடுகளை வாங் கிக்கொள்ளலாமே என எண்ணி ஆட்டைக் கொடுத்து விட்டுப் பணத்தை வாங்கிக் கொண்டேன். இதோ அந்த நூறு ரூபாய்' என்று சொல்லி அவன் முன் வைத்தான்.

இதைக் கண்டு முத்தம்மாள் ஆச்சரியப்பட்டாள். பழனியப் பனும் அதற்குப் பிறகு வேலுவை புரீட்சிக்கவே இல்லை. முத்தம் மாளும் வேலு நாணயம் தவருத வன் என உணர்ந்தாள்.



# கடவுளுக்கே நாமமா?

வீரப்பன் என்ற வியாபாரி தினமும் தன் இரும்புப் பெட்டியில் பணத்தை வைத்துப் பூட்டி விட்டு கடையை மூடிக் கண்டு ''கடவுளே! என் இரும்புப் பெட்டி பணம் குறையாமல் யாருமே எடுக்காமல் இருந்தால் உனக்கு ஒரு தேங்காய் உடைக்கிறேன்'' என்று வேண்டிக் கொண்டு வந்தான். ஆனால் ஒரு நாள் கூட ஒரு தேங்காயும் உடைக்கவில்லை.

இப்படியே பல நாட்களாயின். ஒரு நாள் கடவுள் வீரப்பனின் கனவில் தோன்றி ''வீரப்பா! என்ன இது? இவ்வளவு நாட்களாகியும் நீ வேண்டுதல் செய்து கொண்டபடி தேங்காயே உடைக்கவில்லையே. ஏன்?'' என்று கேட்டார்

வீரப்பனும் ''ஏன? தேங்காய் உடைக்க வேண்டுமானல் அதை வாங்கக் காசு இரும்புப் பெட்டியிலிருந்து தானே எடுக்க வேண்டும்? என் வேண்டுதல் இரும்புப் பெட்டிக் காசை யாருமே எடுக்கக் கூடாது என்பது தானே. நானே எடுத்தால் எப்படி தேங்காய் உடைப்பது?'' என்ருன்.

கடவுள் பதில் பேசாமல் மாயமாய் மறைந்தார்.






# அசட்டு தைரியம்

உமா தாயாரை இழந்து விட்டவள். எனவே அவளது தந்தை அவளைச் செல்லமாக வளர்த்து விட்டார். அவள் போக்கில் அவர் விட்டதால் அவள் அசட்டு தைரியம் கொண்டு தனியாகவும் இருட்டிலும் எங்கு வேண்டுமானாலும் இஷ்டப்படி போகலானாள். வீட்டில் காற்று இல்லை என்று கொல்லைப்புறத்தில் தனியாகப் போய் படுத்துக் கொள்வாள். ஊரின் எல்லையில் உள்ள கோவிலுக்குத் துணை இல்லாமல் தனியாகப்போய் நேரம் கழித்து வீடு திரும்பி வருவாள். யாரையும் லட்சியம் செய்யாமல் தனக்கே எல்லாம் தெரிந்து விட்டதாக நினைத்துக் கொண்டு எல்லோரையும் தூக்கி எறிந்து பேசி வந்தாள்.

உமாவுக்குக் கல்யாண வயது வந்து விட்டது. அப்போதுதான் அவளது தந்தைக்கு அவளைப் பற்றி பெருத்த கவலை ஏற்பட்டது. அவளிடம் அவர் என்ன சொல்லியும் அவள் கேட்காமல் தன் போக்கிலேயே போகலானாள்.

ஒருநாள் உமாவின் தகப்பனார் அவளிடம் ''உமா, உனக்கு வரன் பார்க்க நான் இன்று வெளியூர் போகிறேன். நாளைக்குத்தான் வருவேன். வீட்டை ஜாக்கிரதையாக பார்த்துக் கொள். என்றார். அவளோ ''என்னப்பா சும்மா பயமுறுத்துகிறீர்கள்? எல்லாம் எனக்குத் தெரியும். எனக்கு பயமே இல்லை. நீங்கள் போய் வாருங்கள்'' என்றாள்.

ஆனால் உமாவின் தந்தை போகு முன் வீட்டிலிருந்த பணம் காசு விலையுயர்ந்த நகைகள் எல்லாம் கந்தல் துணியில் மூட்டையாகக் கட்டி ஒடிந்து போன ஒரு ஜாதிக்

சீதா நாராயணன்

காய் மரப் பெட்டியில் போட்டு பரண்மேல் ஒரு மூலேயில் போட்டு விட்டுப் போனுர். உமா வீட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே இருந்தாள்.

அவள் இரவானதும் சாப்பிட்டு, காற்ருட இருக்கலாம் என எண்ணி வீட்டின் கொல்லேப் புறத்தில் போய் வெகு நேரம் உலாவிளுள். பிறகு கொல்லேப்புறக் கதவைச் சாத்தி தாளிட்டு விட்டுப் படுத்துக் கொண்டாள்.

சற்று நேரத்திற்கெல்லாம் யாரோ கொல்லேக் கதவைத் தட்டவே உமா ஓடிப் போய் கதவைத் திறந்து ''யாரது?'' என்று கேட்டாள். உடனே சட்டென இருபத்தைந்து வயது வாலிபன் சட்டென வீட்டிற்குள் நுழைந்து கொல்லேக் கதவைத் தாளிட்டுச் சாத்தி விட்டு ஒரு கத்தியைக் காட்டி மிரட்டி ''உம் வீட்டிலுள்ள பணம் காசு நகை எல்லாம் எடுத்துக் கொடு'' என மிரட்டினுன். உமா திகைத்துப் போய் நின்ருள். அவனே ''உம். எடு எல்லாம்'' என்று மறுபடியும் கத்தியைக் காட்டி மிரட்டினுன்.

உமாவும் ''வீட்டில் பணமே இல்லே. என் தகப்பனுர் வெளியூரில் எனக்கு வரன் பார்த்து அவனுக்குக் கொடுக்க எல்லாவற்றையும் எடுத்துப் போய் விட்டார்'' என்ருள். அவனே எல்லா இடத்திலும் தேடிப் பார்த்து விட்டு எதுவும் கிடைக்காமல்



கடைசியில் அவள் கழுத்தில் போட்டுக் கொண்டிருந்த தங்கச் சங்கிலியை அறுத்து இழுத்துக் கொண்டு கொல்லேக் கதவைத் திறந்து கொண்டு வெளியே ஓடினுன். அவன் அந்தக் கதவை மூடி வெளிப்புறமாகத் தாளிட்டு விட்டு ஓடியே போய் விட்டான்.

மறுநாள் அவளது தந்தை வந்து நடந்ததைத் தெரிந்து கொண்டு ''உன் சங்கிலி போனது போனது தான். யாராவது இரவில் கதவைத் தட்டினுல் முன்பின் யோசிக்காமல் கதவைத் திறப்பார்களா? உன் அசட்டுத் தைரியம் அப்படிச் செய்ய வைத்து உனக்கு நஷ்டத்தை ஏற்படுத்தியது. துணேக்கு அழைத்துக் கொள்வது, இருட்டில் போக எண்ணுமல் விளக்கை எடுத்துச் செல்வதெல்லாம் நாம் ஜாக்கிரதையாக இருக்கவே. இவை எல்லாம் இருந்தால் நமக்கு தைரியமில்லே என்று அர்த்தமில்லே. சரியான சமயத்தில் செயல்படாமல் நிற்பதே பயப்படுதல் என்பதாம். இப்போதாவது தெரிந்ததா?'' என்ருர்.

உமாவிற்குக் கல்யாணம் நடக்கப் பெண் வீட்டார் தங்கச் சங்கிலி போட்டார்கள். அது கண்டு உமா திடுக்கிட்டாள். ஏனெனில் அது அவளுடைய பழையத் தங்கச் சங்கிலி போல இருந்தது. தான் மணந்து கொண்டவனேப் பார்த்தாள். ஆமாம் சந்தேகமே இல்லே. தன்னே அன்றிரவு பயமுறுத்தி சங்கிலியை அறுத்துக் கொண்ட வாலிபனே என அவள் கண்டு கொண்டாள்.

அவள் தன் தந்தையிடம் ''என்ன அப்பா இது?'' என்று கேட்க அவரும் ''உனக்கு புத்தி கற்பித்துத் திருத்தவே இந்த மாப்பிள்ளே அப்படி ஒரு நாடகமாடினுர். நீ திருந்தி விட்டாய் என்று கண்டு உன்னே மணந்து கொண்டார்'' என்ருர். உமா தலே குனிந்து நின்ருள்.





# கௌதமர்

பிரம்மா அகலிகை என்ற அழகான பெண்ணைச் சிருஷ்டித்தார். அவளது அழகைக் கண்டு தேவர்களும் முனிவர்களும் போட்டி போட்டுக் கொண்டு அவளை மணக்க வந்தனர். பிரம்மாவும் அவர்களிடம் யார் உலகை ஒரு சுற்று சுற்றி முதலில் வருகிறார்களோ அவர்களுக்கே அகலிகை என்று கூறி விட்டார். உடனே உலகைச் சுற்றி வர எல்லோரும் கிளம்பி விட்டார்கள்.

ஆனால் கௌதமர் என்ற முனிவர் பசுவையும் அதன் கன்றையும் ஒரு சுற்று சுற்றி வந்து பிரம்மாவிடம் ''கோமாதாவைச் சுற்றி வந்தால் பூமியை ஒரு தடவை சுற்றியதற்குச் சமம்'' என்று கூறி அகலிகையை மணந்து கொண்டு விட்டார். ஆரம்பத்தில் இருந்தே இந்திரனுக்கு அகலிகை மீது ஒரு கண். அதனால் ஒரு நாள் நள்ளிரவு கௌதமரின் ஆசிரமத்தருகே வந்து கோழி போலக் கூவினான். கௌதமரும் அது கேட்டுக் குளிக்க ஆற்றிற்குப் போனார். இந்த சமயம் இந்திரன் கௌதமரைப் போல உருமாறி உள்ளே போய் அகலிகையுடன் சல்லாபித்தான். சற்று நேரத்திற்குப் பின் இதைத் தெரிந்து கொண்ட கௌதமர் இந்திரனையும் அகலிகையையும் சபித்து விட்டார்.

கௌதமர் விதை விதைத்தாலே உடனேயே முளைமுளைத்து முதிர்ந்து பயிராகும் சக்தியைப் பெற்றிருந்தார். இதனால் பஞ்சம் வந்த போது முனிவர்களெல்லாம் கௌதமரை அணுகி உணவு தானியங்களை நிலங்களில் விளைவிக்கச் சொல்லி சாப்பிட்டனர். சில முனிவர்களுக்கு கௌதமர்

மீது பொறாமை ஏற்பட அவர்கள் ஒரு மாயப் பசுவை சிருஷ்டித்து கௌதமரின் நிலத்தில் மேய விட்டார்கள். பசு தன் நிலத்தில் மேய்வது கண்டு கௌதமர் கோபம் கொண்டு அதன் மீது தண்ணீரைத் தெளித்தார். அது உடனே இறந்து விழுந்தது.

அதைக் கண்ட முனிவர்கள் கௌதமரைப் பார்த்து "பசுவைக் கொன்ற மகாபாவி நீ. உன் ஆசிரமத்தில் இருந்து நாங்கள் சாப்பிட மாட்டோம்" என்றனர். கௌதமர் அதற்கு என்ன பிராயச்சித்தம் என்று கேட்கவே பசு விழுந்து இறந்த இடத்தில் கங்கை நீர் ஓடினல் சரியாகி விடும் என்றனர்.

கௌதமரும் நீண்டகாலம் சிவனைக் குறித்து தவம் செய்து அவரது சடையில் ஒரு துளி கங்கை நீர் இருக்க வாங்கிக் கொண்டு வந்தார். அதைத் தம் நிலத்தில் பசு இறந்து கிடந்த இடத்தில் பிழியவே கங்கை நதியாகி ஓடியது. பசுவும் உயிர் பெற்று மாயமாக மறைந்தது. கௌதமர் கொண்டு வந்ததால் அதற்கு கௌதமி நதி என்றும் பசுவைக் காத்ததால் அதற்கு கோதாவரி என்றும் பெயர் ஏற்பட்டது.

ஒரு முறை கௌதமர் பிரம்மதத்தன் என்ற மன்னனின் விருந்தாளியாகப் பல வருடங்கள் இருந்தார். ஒரு நாள் அவர் சாப்பிடும் உணவில் மாமிசத் துண்டு இருக்கவே கௌதமர் அவனைக் கழுகாக ஆகி விடும்படிச் சபித்தார். அரசன் அவரிடம் மன்னிப்புக் கேட்கவே கௌதமரும் ''இராமர் உன்னைத் தொட்டால் உனக்கு சாப விமோசனம் ஏற்படும்'' என்ருர்.

கௌதமர் நியாய சூத்திரங்களை வகுத்தார். ஆனுல் வியாசர் அவற்றைப் பழிக்கவே கௌதமர் வியாசரைத் தம் கண்களால் பார்க்கப் போவதில்லை எனக் கூறித் தன் பாதங்களில் கண்களை அமைத்துக் கொண்டார்.





# பிரபாவதி

மேரு மலை மீது அமர்ந்து வஜ்ஜிர நாபன் என்ற அரக்கன் பிரம்மாவை நோக்கித் தவம் புரிந்து அவரிடம் தேவர்களால் தனக்கு மரணம் ஏற்படக் கூடாதென்ற வரம் பெற்றான்.

வஜ்ஜிரநாபனின் கோட்டை வஜ்ஜிரபுரி. அதை யாராலும் வெல்ல முடியாது. காற்றுக் கூட நுழைய வேண்டுமென்றால் வஜ்ஜிர நாபனின் அனுமதி பெற்றே ஆக வேண்டும்.





வரம் பெற்ற கர்வத்தால் வஜ்ஜிர நாபன் எல்லா அரசர்களையும் வென்று அவர்களது நாடுகளை நாசப்படுத்தினான். மக்கள் அவனது அக்கிரமங்களைச் சகிக்க முடியாமல் தவித்தனர்.

பூவுலகை வென்ற வஜ்ஜிரநாபன் தேவலோகத்தின் மீதும் பயமில்லாமல் தாக்குதலை நடத்தினான்.





அவன் இந்திரனைத் தன்னோடு போர் புரிய வரும்படி அழைத்தான். இந்திரனுக்கு என்ன செய்வது என்றே தோன்றவில்லை.

வஜ்ஜிரநாபனின் கோட்டையை அவன் இல்லாத சமயத்தில் தாக்கி அழிக்க தேவர்கள் எண்ணினார்கள். ஆனால் வஜ்ஜிரபுரிக் கோட்டை மிக பலமானதாயிற்றே.







வஜ்ஜிரநாபனுக்கு தேவர்களால் மரணம் இல்லை. ஆனால் யாராவது ஒரு மனிதன் அவனைக் கொல்லலாமே, துவாரகையிலுள்ள கிருஷ்ணரின் மகன் பிரத்யுமனன் இதற்கு ஏற்றவன் என இந்திரன் நினைத்தான்.

வஜ்ஜிரநாபனின் மகள் பிரபாவதி மிக மிக அழகானவள். வஜ்ஜிர நாபன் அவளைத் தன் உயிருக்கும் மேலாக நேசித்தான். அவள் நன்கு நடனமும் ஆடுவாள்.



ஒரு நாள் பிரபாவதி தன் பூங்காவிலுள்ள குளத்தருகே உட்கார்ந்திருந்தாள். அப்போது இந்திரன் அனுப்பிய சில அன்னப்பறவைகள் அங்கு வந்து திரிந்தன. அவற்றைக் கண்ட பிரபாவதி மனம் மகிழ்ந்தாள்.

அந்த அன்னங்கள் ''இந்தப் பிரபாவதி தான் எவ்வளவு அழகானவள்! இவளுக்கு ஏற்றவன் துவாரகையிலுள்ள பிரத்யும்னனே'' எனத் தமக்குள் பேசிக் கொண்டன. அதைப் பிரபாவதி கேட்டாள்.

இதற்குள் வஜ்ஜிரநாபன் தன் மகளுக்கு நாட்டியம் கற்பிக்க பத்திரன் என்ற நடன ஆசிரியரை அனுப்பினுன். ஆனுல் தேவர்கள் நடுவழியில் அவனைக் கண்டு தூக்கிக் கொண்டு போனுர்கள்.



தேவர்கள் பத்திரனின் ஆடைகளை எடுத்து பிரத்யும்னனுக்கு அணிவித்து அவனை பத்திரன் எனப் பிரபாவதியிடம் அனுப்பி வைத்தார்கள்.



பத்திரன் வேஷத்தில் வந்த பிரத்யும்னன் தான் இன்னுனெனப் பிரபாவதியிடம் கூறினுன். பிரபாவதிக்கும் ஒரே சந்தோஷமாகப் போய் விட்டது.



பிரபாவதி ரகசியமாகப் பிரத்யும்னனை மணந்து கொண்டாள். எப்போதும் போர் புரிவதிலேயே ஈடுபட்டிருந்த வஜ்ஜிரநாபனுக்கு இது தெரியவில்லை. பிரபாவதிக்கும் ஒரு ஆண் குழந்தை பிறந்து



அப்போதுதான் வஜ்ஜிரநாபனுக்கு விஷயம் தெரிந்தது. அவன் கோபப்பட்டு பிரத்யும்னனுடன் போர்புரியலானுன். கிருஷ்ணர் அனுப்பிய சக்கிராயுதத்தால் பிரத்யும்னன் வஜ்ஜிரநாபனைக் கொன்ருன்.




# ஆஸ்திகன்

புராணங்களில் வரும் சிறுவர்களில் பல சிறப்புகளைப் பெற்றவன் ஆஸ் திகன். இவனது தந்தை ஜரத் காரர் என்னும் பிராம்மணர். இவர் பிரம்மச்சாரியாக இருந்த போது ஒரு மரத்தில் சிலர் தலை கீழாகத் தொங்கிக் கொண்டு தவம் செய்யும் விசித்திர நிலையைக் கண்டார்.

ஜரத்காரர் அவர்களிடம் ''ஏன் இப்படி இருக்கிறீர்கள்?'' என்று கேட்க அவர்களும் ''நாங்கள் ஜரத்காரனின் முன்னோர்கள். அவன் கல்யாணம் செய்து கொண்டு மகனை அடையாததால் நாங்கள் சொர்க்கத்திற்குப் போக முடியவில்லை. புத்திரன் பிறந் தாலே 'புத்' என்ற நரகத்திலிருந்து ஒருவன் தப்ப முடியும். ஜரத்கார னுக்கோ மகன் இல்லை. எனவே நரக வாசத்திலிருந்து தப்பவே இப்படிக் கடுந்தவம் புரிகிறோம்'' என்றார்கள்.

அதைக் கேட்ட ஜரக்காரர் மனம் வருந்தி உடனே கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித் தார். ஜரத்காரிகை என்ற பெண் ணைப் பார்த்து அவர் மணந்து கொண்டு ஆஸ்திகன் என்ற மகனை அடைந்தார். ஜரத்காரிகை வாசுகி என்ற நாகராஜனின் தங்கை.

தனக்கு மகன் பிறந்ததால் தன் பாட்டனும் முப்பாட்டனும் நரகத்திற்குப் போகாமல் சொர்க் கத்திற்குப் போனதைக் கண்டு ஜரத்காரர் திருப்தி அடைந்தார். தனது நோக்கம் நிறைவேறியதால் ஜரத்காரிகையை விட்டுத் தவம் செய்யப் போகத் தீர்மானித்துக் கொண்டார். அதனால் அற்ப கார ணத்திற்காக அவர் தம் மனைவியை

கோபித்துக் கொண்டு மனேவியை யும் மகனேயும் விட்டு விட்டுக் காட்டிற்குப் போய் விட்டார்.

ஆஸ்திகன் சியவனனின் மகஞன பிரமதி என்பவனிடம் வேத சாஸ்திரங்களேக் கற்ருன். அவன் நல்ல அறிவாளியாக விளங்கிஞன்.

இச்சமயம் தட்சகன் பரீட்சித்து மன்னனேத் தீண்டி கொன்று விடவே பரீட்சித்துவின் மகன் ஜெனமேஜெயன் கடும் கோபம் கொண்டான். அவன் தட்சன் மீதும் அவனது வம்சத்தவர்களான பாம்புகளின் மீதும் பழி வாங்கி வஞ்சம் தீர்த்துக் கொள்ள தீர்மானித்தான். அதற்காக அவன் ஒரு சர்ப்ப யாகம் செய்து அதில் பாம்புகளேயெல்லாம் விழச் செய்து பாம்புகளே அழிக்கலாஞன். இதைக் கண்ட வாசுகி தன் தங்கை ஜரத்காரிகையிடம் சொல்லி ஆஸ்திகனே ஜெனமேஜெயனிடம் அனுப்பி அந்த யாகத்தை எப்படி யாவது நிறுத்த வழி செய்யுமாறு சொன்ஞன். வாசுகி வேண்டிய படியே ஜரத்காரிகையும் ஆஸ்திகனிடத்தில் கூறவே ஆஸ்திகனும் ஜெனமேஜெயன் யாகம் செய்யும் இடத்திற்குப் போஞன். பிராம்மணராக உள்ள ஆஸ்திகனேக் கண்ட ஜெனமேஜெயன் ''தங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று பணிவுடன் கேட்டான்.

யாகத்தின் போது பிராம்மணர் எதைக் கேட்டாலும் யாகம் செய்பவன் கொடுத்தாக வேண்டும் என்ற விதி இருப்பதால் ஆஸ்திகனும் ''அரசே நாக வம்சத்தை அழிக்கும் இந்த யாகத்தை நிறுத்த வேண்டும். இதுவே நான் கோருவது'' என்ருன். ஜெனமேஜெயனும் உடனேயே சர்ப்ப யாகத்தை நிறுத்தி விட்டான். இதஞல் வாசுகி, தட்சகன் போன்ற நாகராஜர்கள் உயிர் தப்பிஞர்கள். இவ்வாறு ஆஸ்திகன் பாம்புகளின் வம்சம் அழிந்து போகாமல் காப்பாற்றிஞன்.





# நீங்கள்தாம் மாப்பிள்ளை!

ஐநூறு வருடங்களுக்கு முன் கலிங்கபகுதியில் ஒரு நாட்டில் புருஷோத்தமன் என்ற கங்க வம்சத்து மன்னன் இருந்தான். நல்ல பேரும் புகழும் பெற்று அழகாக இருந்தான். அவன் தனக்கு ஏற்ற பெண்ணைக் கிடைத்தாலே கல்யாணம் செய்து கொள்வதாகத் தீர்மானித்திருந்தான்.

அப்போது காஞ்சியை ஆண்ட மன்னனுக்கு அழகான மகள் ஒருத்தி இருந்தாள். அவளது அழகு பற்றி பல நாடுகளிலும் பேச்சு இருந்தது. இதனால் எல்லோருமே புருஷோத்தமனுக்கு ஏற்றவள் காஞ்சி அரசகுமாரி தான் என்று கூறி வந்தார்கள். புருஷோத்தமனின் தந்தையும் தன் மகனுக்கு காஞ்சி அரசகுமாரியைக் கேட்க ஆளையும் அனுப்பினான். காஞ்சி மன்னனும் கங்க வம்சத்தைப் பற்றியும் புருஷோத்தமனைப் பற்றியும் நன்கு விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டியனவற்றையெல்லாம் அறிந்து கொண்டான். அதன் பிறகு அவன் வந்த தூதனிடம் ''ஆகா. என் மகளை புருஷோத்தமனுக்கு மணம் செய்து வைக்க எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை. அவர்கள் பெண் பார்க்க வந்து பேசி முடிவு செய்து கொண்டு போகலாம் என்று சொல்லி அனுப்பினான்.

கல்யாணம் அநேகமாக நிச்சயமாகி விட்டது என்ற நிலை ஏற்பட்டது. பெண்ணைப் பார்க்க புருஷோத்தமன் வர ஏற்பாடுகள் நடந்தன. புருஷோத்தமனும் பெண்ணைப் பார்த்தான். அரசகுமாரியும் அவனைப் பார்த்தாள். இருவர் மனமும் ஒன்றுகின. இனி

காசி சுப்பிரமணியன்



வருடாவருடம் திருவிழாவிற்கு முன் சுவாமியின் காலடியில் தங்கத் துடப்பத்தால் பெருக்கித் திருவிழாவை ஆரம்பித்து வைத்து வந்தான்.

இந்த விஷயத்தைக் கேட்டதும் காஞ்சிபுர மன்னன் ''போயும் போயும் துடப்பம் பிடித்துப் பெருக்கும் ஒருவனுக்கா என் மகளைக் கல்யாணம் செய்து கொடுப்பது? உனக்கு என் மகளைக் கொடுக்க முடியாது'' என புருஷோத்தமனுக்கு எழுதி அனுப்பி விட்டான். அதைப் படித்த புருஷோத்தமன் கடுங்கோபம் கொண்டு காஞ்சியின் மீது படை எடுத்துச் சென்றான். ஆனால் காஞ்சி மன்னன் அவனைத் தோற்கடித்துத் துரத்தினான்.

ஆனால் புருஷோத்தமன் மனம் தளர்ந்து போய் விடவில்லை. தன்னை அவமதித்த காஞ்சி மன்னனுக்கு நல்ல பாடம் கற்பிக்க வேண்டும் என எண்ணினான். எனவே புருஷோத்தமன் பெரிய படையைத் திரட்டிக் கொண்டு வந்து காஞ்சிபுர மன்னனைத் போரில் தோற்கடித்தான். அவனையும் அவளது மகளையும் சிறைப் பிடித்து விட்டான். எல்லோரும் புருஷோத்தமன் சிறைப் பிடித்த காஞ்சி அரசகுமாரியை மணந்து கொள்வான் என்றே எதிர்பார்த்

முகூர்த்தம் குறித்து அனுப்புவதாகக் கூறி புருஷோத்தமன் தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றான்.

அப்போது தான் காஞ்சி மன்னனுக்கு ஒரு விஷயம் தெரிய வந்தது. கங்க வம்சத்து அரசர்கள் ஜகந்நாதபுரிக் கோவிலின் ஜகந்நாத சுவாமியின் பக்தர்களாம். ஒவ்வொரு வருடமும் அக்கோவிலில் திருவிழா ஆரம்பமாகும் போது சுவாமியின் காலின் கீழுள்ள நிலத்தைத் தங்கப்பிடி கொண்ட துடப்பத்தால் பெருக்கி சுத்தம் செய்து திருவிழாவை ஆரம்பித்து வைப்பார்களாம். கங்க வம்சத்தவர் தாம் அந்தக் கோவிலை கட்டியதும் கூட. எனவே புருஷோத்தமனும்

தார்கள். ஆனால் அவன் அவ்வாறு செய்யவில்லை. அவளை அவன் ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

அதற்கு நேர்மாறாக அவன் தன் மந்திரியை அழைத்து ''இந்தப் பெண்ணிற்கு யாராவது துடப்பம் பிடித்துப் பெருக்குபவனாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வையுங்கள். இவளுக்கு வேறு யாரும் தகுந்தவர் இல்லை. அப்போது தான் இவளது தகப்பனின் வாய்க் கொழுப்பிற்கு நான் சரியான பாடம் கற்பித்தது போலாகும். நான் சொன்னபடி செய்யுங்கள்'' என்று கட்டளையிட்டான். மந்திரிக்கு அரசன் அவ்வாறு கட்டளையிட்டது கோபத்தின் காரணமாகத்தான் எனத் தெரிந்து விட்டது. அவன் நல்ல அறிவாளி. எதையும் யோசித்தே செயல்படுவான். எனவே அவசரப்படாமல் அரசனிடம் ''சரி. அப்படியே செய்தால் போயிற்று. இந்தப் பெண்ணிற்கு ஏற்றவனாக, துடப்பம் பிடித்துப் பெருக்கும் வாலிபனை நான் தேடிப் பார்க்கிறேன். அப்படி ஒருவன் கிடைத்ததும் உடனே இவளுக்கு அவனையே கல்யாணம் செய்து வைத்து விடுகிறேன்'' என்று சொல்லி விட்டு வந்தான்.

அப்போதே காஞ்சி அரசகுமாரியை அவன் ரகசியமாக ஓரிடத்தில் இருக்கச் செய்து எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தான். இது யாருக்குமே தெரியாது. புருஷோத்தமனும் தன் கட்டளையை மந்திரி நிறைவேற்றியிருப்பார் என எண்ணிப் பேசாமல் இருந்து விட்டான். கொஞ்ச நாட்களுக்குப் பிறகு அந்த அரசகுமாரியைப் பற்றிய நினைப்பே இல்லாதும் போயிற்று. காஞ்சி மன்னன் கூட தான் அவ்வாறு துடுக்குத்தனமாக எழுதி அனுப்பியதற்காக அப்போது மனம் வருந்தினான்.



சில மாதங்களுக்குப் பிறகு ஜகந்நாதபுரியில் உற்சவம் ஆரம்பமாயிற்று. வழக்கம் போல புருஷோத்தமன் ஜகந்நாதரை வணங்கி அவரது பாதங்களின் கீழ்

தங்கத் துடப்பத்தால் பெருக்கப் போனான். அப்போது காஞ்சி இளவரசியை மந்திரி அவன் முன் சுவாமி சன்னதியில் கொண்டு வந்து நிறுத்தி ''உங்கள் கட்டளை இந்தப் பெண்ணிற்கு யாராவது துடப்பம் பிடித்துப் பெருக்கு பவனைக் கல்யாணம் செய்து வைக்க வேண்டுமென்பது. நானும் இவளுக்கு ஏற்ற கணவனைத் தேடிப் பார்த்தேன். கிடைக்க வில்லை. இவளும் கடவுளின் திருவடி களின் கீழ் பெருக்கும் உத்தம ரையே மணந்து கொள்வதாகச் சபதம் செய்திருக்கிறாள். எனவே இவளை ஏற்கும்படி உங்களையே வேண்டிக் கொள்கிறேன்'' என்றான்.

காஞ்சி இளவரசியும் பக்தி சிரத் தையுடன் மலர்மாலையோடு ஜகந் நாதர் விக்கிரகத்தின் முன் நின்று கொண்டிருந்தாள். அவள் புரு ஷோத்தமனை வணங்கி அவன் கழுத்தில் தான் வைத்துக் கொண் டிருந்த மலர்மாலையைப் போட் டாள். புருஷோத்தமனும் அவளை ஆச்சரியத்துடன் பார்த்தான். அப்போது அவர்கள் மீது உயரத்தி லிருந்து மலர்கள் விழுந்தன.

அவனுக்கு அப்போது பழைய விஷயங்களெல்லாம் நினைவிற்கு வந்தன. அவனும் காஞ்சி இளவர சியை மணந்து கொள்ளத் தீர் மானித்து அதற்கான ஏற்பாடு களைச் செய்யுமாறு மந்திரிக்குக் கட்டளையிட்டான். அது மட்டு மல்ல, தான் சிறைப்படுத்திய காஞ்சி மன்னனை விடுதலை செய்து அவனது நாட்டையும் அவனுக்குத் திருப்பிக் கொடுத்து மரியாதை களைச் செய்தான்.

காஞ்சி மன்னனும் மனம் நெகிழ்ந்து போய் புருஷோத்த மனின் மந்திரியின் அறிவைப் பாராட்டினான். அவனால் அல் லவா அவனுக்கு இழந்த கௌரவ மும் புருஷோத்தமனின் சம்மந்த மும் மீண்டும் கிடைத்தது.



# ஓஹோ! இதுவா வழி?

கஞ்சப்பன் தன் நிலத்தில் விளைந்த எள்ளை உலரப் போட்டு அதற்குக் காவலாக ஒரு முடவனைப் போட்டான். முடவனுக்கு இருகைகளும் இல்லாததால் அவனல் எள்ளை எடுத்துச் சாப்பிட முடியாதே என்று எண்ணியே அவ்வாறு செய்தான்.

உச்சி வேளைக்கு கஞ்சப்பன் எள் உலர்த்திய இடத்திற்கு வந்து பார்த்தான். எள் குறைந்திருக்குமோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. அவன் முடவனிடம் ''எள் குறைந்திருக்கிறதே. நீ எடுத்துச் சாப்பிட்டு விட்டாயா?'' என்று கேட்டான். அவனே ''நான் எப்படிச் சாப்பிட முடியும்? எனக்குத் தான் கை இல்லையே'' என்றான்.

கஞ்சப்பனும் ''கை இல்லாவிட்டாலும் உன் மொண்டிக் கைகளைத் தண்ணீரில் நனைத்து எள்ளில் வைத்தால் எள் ஒட்டிக் கொள்ளும். அதை நீ சாப்பிட்டிருக்கலாம் அல்லவா?'' என்றான். முடவனும் ''ஓஹோ! இப்படி ஒரு வழி இருக்கிறதா? எனக்குத் தெரியாமல் போயிற்றே இனி மேல் இவன் கூறியபடியே செய்து எள்ளைச் சாப்பிடுகிறேன்'' என எண்ணிக் கொண்டான்.






குணசேகரவர்மன் என்ற மன்னன் தன் நாட்டு மக்கள் நல்ல நீதிகளைக் கற்று நேர்மையாக வாழ வேண்டுமென விரும்பினான். அதற்காகப் பல பண்டிதர்களிடம் யோசனை கேட்கவே அவர்களும் ''பகவத் கீதையின் சாரத்தை மக்களுக்கு எடுத்துக் கூறினால் போதும் ஜனங்கள் நேர்வழியில் நடப்பார்கள். கீதையில் இல்லாத அறிவுரை என்ன இருக்கிறது'' என்று கூறினார்கள்.

அரசனும் ''ஆமாம். ஜனங்கள் திருப்தியுடன் இருந்தால் குற்றம் எதுவும் புரியமாட்டார்கள்.'' என எண்ணி முதலில் கீதையை முழுவதும் படித்து அதன் பொருளையும் தெரிந்துகொண்டான். அவன் மனதிலும் ''மக்களுக்கு நல்ல நெறிகளைப் போதிக்க இதைவிடச் சிறந்த நூல் இல்லை. எனவே இதன் பொருளைத் தக்க வித்வான்களைக் கொண்டு மக்களுக்கு விளக்கி நல்ல வழிகள் அவர்களது மனதில் படியும்படிச் செய்கிறேன்'' என எண்ணிக் கொண்டான்.

உடனே அவன் நாடு முழுவதும் பறைசாற்றுவித்து நல்ல படித்த பண்டிதர்கள் பலர் அரசாங்க ஊழியத்தில் பகவத் கீதையின் சாரத்தை மக்களிடையே பரப்ப தேவை என அறிவித்தான். பல பண்டிதர்கள் வந்து கூடி விட்டார்கள். அரசனும் தன் ஆஸ்தான பண்டிதரிடம் 'வந்தவர்களைப் பரீட்சித்துப் பாருங்கள்'' என்றான்.

அவரும் எல்லோரையும் பரீட்சித்து விட்டு ''அரசே. வந்தவர்கள் எல்லோருமே நல்ல பாண்டித்தியம் பெற்றவர்கள். ஏராளமாகப் படித்திருக்கிறார்கள். பகவத்

பாபநாசம் சாமா

கீதையைத் தலைகீழாக ஒப்பிக்கும் அளவிற்கு மனப்பாடம் செய்திருக்கிறார்கள். இப்படி கீதையையே கரைத்துக் குடித்து விட்ட வித்வான்களிடம் அது பற்றிக் கேள்விகள் கேட்கும் அளவிற்கு என் சக்தி இல்லை'' என்றாள்.

அரசன் என்ன செய்வது என யோசிக்கலானான். அப்போது அரச சபையில் இருந்த தேவிதாசன் என்ற இளம் வயதினன் அரசனிடம் வந்து ''அரசே. நான் இவர்களைப் பரீட்சித்துப் பார்த்து விட்டு தாங்கள் கொடுக்கும் வேலைக்கு இவர்கள் ஏற்றவர்களா என்று கூறட்டுமா?'' என்று கேட்டான். அரசனும் எப்படியாவது ஒரு வழி செய்தால் நல்லது என எண்ணி அவனை அந்தப் பண்டிதர்களைப் பரீட்சிக்கச் சொன்னான்.

தேவிதாசனும் அரசன் முன்னிலையிலேயே அவர்களைப் பரீட்சிக்க முயன்றான். அவன் முதலில் அவர்களிடம் ''பகவத் கீதையை புரிந்து கொள்ள ஒருவனது வாழ்நாளே போதாது என்கிறார்கள். நீங்கள் எப்படி குறுகிய காலத்தில் அதைப் புரிந்து கொண்டீர்கள்?'' என்று கேட்டான்.

அங்கு வந்திருந்த ஒவ்வொருவரும் ''ஆமாம். நீங்கள் கூறுவது போல பகவத்கீதை என்பது மாபெரும் நூல். அதன் பொருளை



அவ்வளவு எளிதில் அறிந்து கொள்ள முடியாதுதான். ஆனால் நான் மிகவும் சிரமப்பட்டு, முயற்சி செய்து அதன் பொருளைப் புரிந்து கொண்டேன். அடேயப்பா! நான் தான் அதற்காக எவ்வளவு பாடுபட வேண்டியதாயிற்று!'' என்று கூறினார்கள்.

அப்போது தேவிதாசன் மன்னனிடம் ''அரசே! இவர்கள் பெரிய பண்டிதர்களே. ஆனால் இவர்களில் ஒருவர் கூட பகவத்கீதையைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை'' என்றான். அது கேட்டு பண்டிதர்களும் திடுக்கிட்டார்கள். மன்னனும் ஆச்சரியப்பட்டவனாய் ''நீ இதை எப்படிச் சொல்லலாம்?

நீ இவர்களிடம் கீதையிலிருந்து ஒரு கேள்வி கூடக் கேட்கவில்லையே'' என்ருன்.

தேவிதாசனும் "அரசே! நானும் கீதையை ஓரளவு படித்திருக்கிறேன். அதை நான் புரிந்துகொண்டவரையில் அதில் 'தான்' என்ற அகம்பாவத்தை விட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. எந்த வேலையையும் ஒருவன் தானே செய்வதில்லை என்றும் கடவுளே செய்கிருர் என்றும் உள்ளது. மனிதன் கடவுளின் கருவி போல எனக் கூறுகிறது. 'நான்' எனக் கூறுபவனிடம் அறியாமையும் அகந்தையும் இருக்கும். கீதையின் பொருளை மக்களிடையே பரப்ப வந்துள்ள இந்த பண்டிதர்கள் எல்லோரும் தாமே தம் சக்தியால் கற்று உணர்ந்ததாகக் கூறினுர்கள். எனவே கீதை கூறுவது போல நடக்காத இவர்களால் கீதையின் சாரத்தை எப்படி எடுத்துக் கூறமுடியும்?'' என்று கேட்டான். பண்டிதர்களும் "ஆமாம். இவர் கூறுவது சரியே'' எனக் கூறினுர்கள். அரசனும் வந்த பண்டிதர்களுக்குப் பரிசுகள் அளித்து அனுப்பி விட்டான். பிறகு அவன் தேவிதாசனிடம் ''நம் நாட்டு மக்கள் திருப்தியுடன் இருக்க கீதையை எப்படி போதிப்பது?'' என்று கேட்டான்.

தேவிதாசனும் ''கீதையைப் படித்தால்தான் திருப்தி ஏற்படும் என்பதில்லை. எவன் ஒருவன் பொழுதை வீணுக்காமல் உழைத்துச் சம்பாதித்து சாப்பிடுகிருனே அவனே திருப்தியுடன் இருப்பான். எனவே யாரும் சோம்பேறித்தனமாக இராமல் வேலை செய்ய வேலைவாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுங்கள். மக்கள் திருப்தி அடைவார்கள்'' என்ருன்.

மன்னனும் அந்த யோசனையை ஏற்று மக்களுக்கு வேலைவாய்ப்புகளை ஏற்படுத்தவே மக்களும் சுகமாக வாழ்ந்தனர்.



# சுபாவம் மாறுமா?

ஒரு நாளிரவு ஒரு திருடன் தருமலிங்கத்தின் வீட்டிற்குள் ஓடி வந்து ''ஐயா! நான் ஒரு திருடன். நான் இங்கே ஒளிந்து கொள்கிறேன். காவலாளிகள் வந்து கேட்டால் நான் இங்கே இல்லை என்று பொய் கூறி அனுப்பி விடுங்கள். நான் உயிர் தப்பிச் செல்கிறேன். உமக்கு என்றென்றும் நன்றியறிதல் உள்ளவனுக இருப்பேன் என்ருன். தருமலிங்கமும் வீரர்கள் வந்தபோது ''இங்கே திருடன் யாரும் வரவில்லை'' என்று சொல்லி அனுப்பி விட்டான்.

வீரர்கள் போனதும் திருடன் வெளியே வந்து கத்தியைக் காட்டி தருமலிங்கத்தை மிரட்டி ''உம் வீட்டிலுள்ள பணத்தையெல்லாம் கொடு'' என்ருன். தருமலிங்கமோ ''என்னப்பா. என்றென்றும் எனக்கு நன்றி அறிதலுள்ளவனுக இருப்பேன் என்ருயே. மறந்து விட்டாயா?'' என்று கேட்டான். திருடனே ''நான் அப்படிச் சொல்லவில்லையே'' என்ருன், ''என்னப்பா கூசாமல் இப்படிப் பொய் சொல்கிருயே'' என்ருன் தருமலிங்கம். திருடனே ''நீ மட்டும் அரிச்சந்திரனே? இப்போது தானே காவலாளிகளிடம் நான் இங்கே இல்லை என்று பொய் சொன்னுய்'' என்ருனே பார்க்கலாம்.






# புதையல் ரகசியம்

ஒரு கிராமத்தில் மலையப்பன் என்ற குடியானவன் இருந்தான். அவன் பாடு பட்டு இருந்ததைக் கொண்டு திருப்தியுடன் இருந்தான். அவன் மனைவி இறந்து விட்டாள். எனவே தன் இரு மகன்களையும் ஒரு குறைவு கூட அவர்கள் உணராமல் அவன் வளர்த்து வந்தான். அவர்கள் வளர்ந்து பெரியவர்களாகி வீணுகப் பொழுது போக்கி வந்தார்கள்.

அவர்களை திருத்த எண்ணி மலையப்பன் தன் மகன்களிடம் ''உங்களுக்குப் பணம் கொடுக்க என்னுல் முடியவில்லை. உங்கள் தாத்தா ஓரிடத்தில் பணத்தைப் புதைத்து வைத்திருக்கிறுர். அதை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றுன். அவர்களும் ''எங்கே புதைத்து வைத்திருக்கிறுர் தாத்தா?'' என்று கேட்டார்கள்.

''வடதிசையில் தர்மபுரி என்ற ஊர் இரு நூறு மைல் தூரத்தில் உள்ளது. அந்த ஊரின் தெற்கே ரத்தினகிரி என்ற மலை உள்ளது. அந்த மலையின் மேற்குப் பக்கமுள்ள சாரலில் ஒரு குகை உள்ளது. குகைக்குள் போனுல் உங்கள் தாத்தாவின் பெயர் அங்குள்ள ஒரு கல்லின் மீது செதுக்கப்பட்டிருக்கும். அந்தக் கல்லைப் புரட்டினுல் அவர் புதைத்து வைத்த புதையல் கிடைக்கும்'' என்றுன்.

உடனே அவனது இரு மகன்களும் கொஞ்சம் பணத்தோடு தர்மபுரியை நோக்கிக் கிளம்பினுர்கள். வழியில் அவர்கள் கொண்டு வந்த பணம் இரண்டே நாட்களில் தீர்ந்து விட்டது. அவர்களுக்கு என்ன செய்வதென்று தெரிவில்லை. அப்போது ஒரு குடியானவன் அவர்களிடம் ''என் வயலில் கூலி

சாமி. துரைராசன்

வேலே செய்ய வருகிறீர்கவா ?'' என்று கேட்டான்.

அவர்களும் அப்போதைக்கு செலவிற்குப் பணம் கிடைக்குமே என எண்ணி அதற்கு ஒப்புக் கொண்டார்கள். அவர்கள் நான்கு நாட்கள் உற்சாகத்தோடு வேலே செய்து கூலியைப் பெற்ருர்கள். இனி ஊர் ஊராகப் போய் இப் படியே வேலே செய்து பணம் சம் பாதித்துக் கொண்டு ரத்தின கிரியை அடைவது என்று தீர்மா னித்துக் கொண்டார்கள்.

அவர்கள் அந்த ஊரிலிருந்து கிளம்பி அந்தப் பணம் செலவாகும் வரை பயணம் செய்து மற்ருெரு ஊரை அடைந்து ஏதாவது வேலே கிடைக்குமா எனப் பார்த்தனர். அங்கே ஒரு குதிரை வியாபாரி அவர்களிடம் தன் குதிரைகளேப் பார்த்துக் கொண்டால் அவை விலே போகும் வரை தன்னிடம் வேலேப் பார்க்கலாம் எனக் கூறி ஞன். அவர்களும் குதிரைகளே நன்கு கவனித்து வந்தனர். குதிரை கள் விலே போயின. வியாபாரியும் அவர்களது வேலேயைக் கண்டு திருப்தி அடைந்து பணம் கொடுத்து அனுப்பிஞன்.

அவர்களும் அந்தப் பணம் செல வாகும் வரைப் பயணம் செய்து உதயகிரி என்ற ஊரை அடைந் தார்கள். அங்கு ஒரு வியாபாரி யிடம் கணக்கு எழுத அவர்கள் அமர்ந்து வியாபார நெளிவு சுளிவு களேக் கற்ருர்கள். அப்போது



தாம் பணம் சம்பாதித்து வியாபாரம் செய்து லாபம் அடையலாமே என எண்ணினார்கள். அந்த வியாபாரி கொடுத்த சம்பளப் பணத்தைச் சிக்கனமாகச் செலவு செய்து மிகுந்த பணத்தைக் கொண்டு அவ்வூரில் ஒரு கடை திறந்து வியாபாரம் செய்யலானார்கள்.

அவர்களது வியாபாரம் நன்கு நடந்தது. நல்ல லாபம் கிடைத்தது. கல்யாணம் செய்து கொண்டார்கள். பணமும் நிறையச் சேர்ந்தது. ஆனாலும் புதையலை எடுத்து வர நினைத்து தம் வீடுகளையும் கடைகளையும் தம் மனைவிகளிடம் ஒப்படைத்து விட்டு அவர்கள் கிளம்பிச் சென்றார்கள்.

அவர்கள் தர்மபுரியை அடைந்த போது தெற்கே ரத்தினகிரி என்ற மலையே இல்லை என்று தெரிந்து கொண்டார்கள். இப்படியா தம் தந்தை தங்களை ஏமாற்றி விட்டார் எனக் கோபம் கொண்டு அவர்கள் திரும்பி தம் தந்தை இருந்த ஊருக்குப் போய் ''எங்களை இப்படி ஏமாற்றலாமா?'' என்று கூச்சல் போட்டார்கள்.

மலையப்பனோ ''நான் உங்களை ஏமாற்றவில்லை. உங்களைப் பார்த்தால் புதையல் கிடைத்து சுகமாக இருப்பவர்கள் போலத் தெரிகிறதே'' என்றான். அவர்களோ ''புதையலா? நாங்கள் கஷ்டப்பட்டுப் பணம் சம்பாதித்தோம். தெரியுமா?'' என மார் தட்டிப் பேசினார்கள்.

அப்போது மலையப்பன் ''இன்னும் என்னவாம்? உங்களுக்குத் தான் பணம் கிடைத்து விட்டதே. அதுதான் புதையல். புதையல் எப்படிக் கிடைக்கும் என்ற ரகசியம் உங்களுக்குத் தெரிந்து விட்டதே. உழைப்புதான் புதையல் போல பணம் அடைய வழி'' என்றான்.

அப்போதுதான் அவர்கள் இருவரும் தம் தந்தை கற்பித்த நீதியைப் புரிந்து கொண்டார்கள்.






**கோ**சல நாட்டை துருவசந்தி என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்கு மனோரமா, லீலாவதி என்று இரு மனைவிகள் இருந்தனர். மனோரமாவின் மகன் சுதர்சனன். லீலாவதியின் மகன் சத்துருஜித். இருவரில் சுதர்சனன் வயதில் ஒரு மாதம் பெரியவன். சத்துருஜித் மிகவும் அழகானவன். நல்ல புத்தி சாலி. அவனை எல்லோருமே விரும்பினார்கள்.

ஒரு முறை காட்டில் துருவசந்தி வேட்டையாடிக் கொண்டிருந்த போது ஒரு சிங்கம் பாய்ந்து அவனைக் கொன்று விட்டது. அவனுடன் வேட்டைக்குப் போனவர்கள் திரும்பி வந்து மந்திரிகளிடம் அரசன் இறந்து போனதைக் கூறினார்கள். அவர்களும் அரசனுக்குச் செய்ய வேண்டிய ஈமச் சடங்குகளை செய்வித்து சுதர்சனனுக்குப் பட்டம் கட்ட ஏற்பாடுகளைச் செய்யலாயினர். அதுதானே முறை என்று எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள்.

மனோரமாவின் தந்தையான கலிங்கநாட்டு மன்னன் வீரசேனன் தன் மாப்பிள்ளை இறந்து போன செய்தி கேட்டதும் தன் மகள் வயிற்றுப் பேரனை சுதர்சனன் சிம்மாசனத்தில் அமரும் வைபவத்தைக் காண வந்தான். இது போலவே லீலாவதியின் தந்தையான உஜ்ஜயினி மன்னன் யுதாஜித் அயோத்திக்கு வந்தான். அவன் தன் மகள் வயிற்றுப் பேரனை

**சுதர்சனனின் கதை**



சத்துருஜித்தைச் சிம்மாசனத்தில் அமர்த்த விரும்பினுன்.

எனவே யுதாஜித் வீரசேன னிடம் ''உன் பேரன் வயதில் ஒரு மாதமே என் பேரனை விடப் பெரியவன். ஆனுல் என் பேரனின் அறிவு அவனுக்கு இல்லை. அரசாள அறிவே தேவை. எனவே என் பேரனே அரசனுக வேண்டும்'' என்ருன்.

வீரசேனனே ''இதென்ன உளறல்? என் மகள் மனேரமா மூத்த ராணி. அவளுக்குப் பிறந்தவன் சுதர்சனன். வயதிலும் மூத்தவன். எனவே அவன்தான் முறைப்படி அரசன் ஆவான்'' என்ருன். அப்போது யுதாஜித் ''சுதர்சனன் எப்படி சிம்மாசனத்தில் அமர்வானே பார்க்கிறேன். என் பேரனுக்கு அறிவு இருக்கிறது. அவனுக்குத் துணையாக என் படையும் உள்ளது. யார் வந்தாலும் எதிர்த்துத் துரத்தப் போகிறேன். தெரியுமா?'' எனக் கோபத்தோடு கூறினுன்.

வீரசேனனும் சத்துருஜித்தும் ஒருவரையொருவர் எதிர்க்கத் தயாராயினர். இதேசமயம் துருவசந்தி இறந்த செய்தி கேட்டு தலைநகரைக் கொள்ளயடிக்கக் காட்டிலிருந்து மலைச்சாதியினர் வந்து விட்டார்கள். இப்படியாகச் சண்டையும் குழப்பமுமாக இருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு யுதாஜித் வீரசேனனைக் கொன்று விட்டான்.

மனேரமா தன் கணவனேடு இப்போது தன் தந்தையையும் இழந்து விட்டதற்காகக் கண்ணீர் விட்டாள். சுதர்சனனுக்கும் வயது அதிகமாகி விடவில்லை. இனி அவனுக்கு யார் பாதுகாப்பை அளிப்பார்கள்? வீரசேனனைக் கொன்ற யுதாஜித் சுதர்சனனை விட்டு வைப்பானு? இனி தன்னையும் அவன் சிறையில் அடைத்துத் துன்புறுத்துவான் என எண்ணிய மனேரமா தனக்கு நம்பிக்கையான விதுல்லன் என்ற மந்திரியுடன் ஆலோசித்தாள். விதுல்லனும் ''இப்போதுள்ள

நிலையில் சுதர்சனனுக்கு உதவ யாரும் முன் வர மாட்டார்கள். காசிமன்னன் என் மாமன். நாம் சுதர்சனனோடு அங்கே போய் விடலாம். அங்கேயே கொஞ்ச காலம் இருக்கலாம். சுதர்சனனும் கல்வி கற்று போர்கலையிலும் நல்ல தேர்ச்சி பெறட்டும். பிறகு தக்க சமயம் பார்த்து என் மாமனின் உதவியால் கோசல நாட்டை நம் வசப்படுத்திக் கொள்ளலாம்'' என்றான்.

மனோரமா தன் மகன் சுதர்சனனோடும் விதுல்லனோடும் சைரந்திரி என்ற பணிப் பெண்ணோடும் விதுல்லனுடன் காசிநகருக்குச் செல்லக் கிளம்பி விட்டாள். ஆனால் வழியில் திருடர்கள் அவர்களைத் தாக்கி எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டு விட்டு விட்டார்கள். அவர்கள் எப்படியோ கங்கையைக் கடந்து பாரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்தை அடைந்தார்கள்.

பாரத்துவாஜ முனிவரும் விதுல்லனிடம் மனோரமாவையும் சுதர்சனனையும் பற்றிய விவரங்களை விசாரித்துத் தெரிந்து கொண்டார். அவர் மனோரமாவிடம் ''கவலைப்படாதே அம்மா. நியாயம் உன் பக்கமே உள்ளது. விரைவில் உன் மகனே அயோத்தி மன்னன் ஆவான். நீ உன் மகனுடன் இங்கேயே இரு'' என்று ஆறுதல்



கூறியதோடு புகலிடமும் அளித்தார். அயோத்தியிலோ சத்துருஜித் தானே மன்னன் எனக் கூறிப் பட்டாபிஷேகம் செய்து கொண்டான். கோசலநாட்டு மக்களுக்கு சுதர்சனனும் மனோரமாவும் எங்கு சென்றார்கள் என்பது தெரியவில்லை. ஆனால் சத்துருஜித்தின் தாத்தாவான யுதாஜித் அவர்களைப் பற்றி விசாரித்து பாரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்தில் அவர்கள் இருப்பதைத் தெரிந்து கொண்டான்.

சுதர்சனன் உயிருடன் இருந்தால் சத்துருஜித்திற்கு என்றுமே ஆபத்துதான் என யுதாஜித் எண்ணி மலைவாசிகளுடைய மன்ன



ஞன சிருங்கபேரிபுர துர்தர்சன் என்பவனைச் சந்தித்து ஏதாவது வழி செய்யப் போனான். இதைக் கேள்விப்பட்ட மனோரமா பாரத்துவாஜரிடம் தனக்கு வரப்போகும் ஆபத்தைக் கூறினாள்.

பாரத்துவாஜரும் யுதாஜித்தும் துர்தர்சனனும் வருவார்கள் என எதிர்பார்த்து தம் ஆசிரம வாசலில் இருந்தார். அவர்கள் வந்ததும் அவர் ''இங்கே எதற்காக வந்தீர்கள்?'' என்று கேட்டார்.

யுதாஜித்தும் ''எதற்கா? மனோரமாவையும் சுதர்சனனையும் பிடித்துப் போகத்தான். மரியாதையாக என்னிடம் அவர்களை ஒப்படைக்கப் போகிறீர்களா அல்லது என் கைவரிசையைக் காட்டச் சொல்கிறீர்களா?'' என்று மிரட்டினான்.

பாரத்துவாஜரோ ''ஏய் மூடா! எங்கே? உன் கைவரிசையைக் காட்டு பார்க்கலாம்? மிரட்டவா செய்கிறாய்? முனிவர்கள் என்றால் கிள்ளுக்கீரை என்று நினைத்து விட்டாயா?'' என்று கோபத்தோடு கூறினார்.

தான் மிரட்டினால் பயந்து போய் பாரத்துவாஜர் மனோரமாவையும் சுதர்சனனையும் ஒப்படைத்து விடுவார் என எண்ணி வந்த யுதாஜித் முனிவரின் பதிலையும் கோபத்தையும் கண்டு மிரண்டு போனான். அவர் சாபம் கொடுத்து விட்டால் என்ன செய்வது? எனவே சற்று யோசித்தே செயல்பட வேண்டும் எனத் தீர்மானித்துக் கொண்டான்.

பின்னர் யுதாஜித் தன் மந்திரியிடம் தனிமையில் ''பார்த்தாயா இவர் மனோரமாவையும் சுதர்சனனையும் நம்மிடம் ஒப்படைக்க மாட்டார் போலிருக்கிறது. அவர்களை எப்படிச் சிறை பிடிப்பது? இங்குள்ள எல்லோரையுமே கொன்று விடலமா?'' என்றான்.

மந்திரியோ "ஊஹூம். முனிவர்களை பகைத்துக் கொள்ள வேண்டாம். அவர்கள் சக்தி வாய்ந்தவர்கள். முன்பு ஒரு முறை வசிஷ்ட



ரைத் தாக்க அரசராக இருந்த விசுவாமித்திரர் போய் மூக்கு உடைபட்டுக் கொண்டு வந்தார். அதனுல் அவர் நாட்டையே விட்டு விட்டுக் காட்டிற்குப் போய் கடுந் தவம் செய்து தானும் முனிவர் ஆனுர். இப்போது சுதர்சன னிமும் பணமும் இல்லை. ஆள் பலமும் இல்லை. அதனுல் நம்மீது படை எடுத்து வருவான் என எண்ணவும் இடமில்லை. ஒரு வேளை அவன் எப்போதாவது அப்படிப் படை திரட்டிக் கொண்டு வந்தால் அப்போது பார்த்துக் கொள்ள லாம். இப்போதைக்கு நீங்கள் முனிவரைப் பகைத்துக் கொண்டு அழியாமல் இருப்பதே நல்லது'' என்று யோசனை கூறினுன். அதன்படியே யுதாஜித் நடக்கத் தீர்மானித்து பாரத்துவாஜரின் கால்களில் விழுந்து வணங்கி தான் துடுக்காகப் பேசியதற்கு மன்னிப் பும் கோரி அங்கிருந்து திரும்பிச் சென்றுன். இதற்குப் பின் மனே ரமா முனிவரது ஆசிரமத்தில் பய மில்லாமல் இருந்து வரலானுள்.

சுதர்சனனும் வளர்ந்து வாலிப ஞனுன். பாரத்துவாஜரிடம் வேத சாஸ்திரங்களைக் கற்றுன். அஸ்திர சஸ்திர வித்தையிலும் அவன் நல்ல தேர்ச்சியும் பெற்றுன். ஒரு நாள் தேவி அவன் கனவில் தோன்றி அவனுக்கு வில்வித்தையில் நல்ல தேர்ச்சி அடையவும் அருள் புரிந் தாள்.

சுதர்சனனுக்கு காசி மன்னனின் மகள் மிகவும் அழகானவள் எனத் தெரிந்தது. அவன் அவளை மணக்க விரும்பினுன். காசி மன்னனின் மகள் சசிகலாவும் பாரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்திலுள்ள சுதர் சனனைப் பற்றிக் கேள்விப்பட்டு அவனையே மணக்கத் தீர்மானித் துக் கொண்டாள். இப்படியாக சுதர்சனனும் சசிகலாவும் ஒருவரை மற்றவர் பாராமலேயே தம் மன தில் கணவன் மனைவியாகப் பாவித் துக் கொண்டு இன்பக் கனுக்கள் கண்டு காலம் கழித்து வந்தார்கள். ஒரு நாள் சுதர்சனனைக் காண

சிருங்கபேரிபுர மன்னன் வந்து அவனுக்கு நான்கு குதிரைகள் பூட்டிய அழகிய ரதம் ஒன்றைக் கொடுத்தான். பலவிதமான ஆயுதங்களையும் அளித்துத் தான் அவனது நண்பன் எனக் கூறினான்.

இதே சமயம் பாரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்திலுள்ள முனிவர்கள் ''சுதர்சனா. நீ அரசனாகப் போகும் காலம் நெருங்கி விட்டது. உனக்கு தேவியின் அருள் கிடைத்து விட்டது. அது ஒரு நாளும் வீண் போகாது'' என்றார்கள். அதைக் கேட்டுக் கொண்டிருந்த மனோரமாவும் ''பெரியவர்களான உங்களது ஆசிகள் வீண் போகாது. ஆனால் யாருடைய உதவியும் இல்லாமல் என் மகன் எப்படி அரசன் ஆவான்? உங்கள் ஆசீர்வாத பலமே அவனுக்கு உள்ளது. அது போதும்'' எனக் கூறி மகிழ்ந்து போனாள்.

சுதர்சனனும் தனக்குக் கிடைத்த ரதத்தில் ஏறி அமர்ந்து கொண்டு அங்கும் இங்கும் அலைய அவனுக்குப் பல வீரர்கள் உதவி புரிய வந்து சேர்ந்தார்கள்.

சசிகலாவின் நிலையைக் கண்ட அவளது தந்தை அவளுக்கு விரைவிலேயே மணம் முடிக்க எண்ணி சுயம்வரம் நடத்துவதாக எல்லா மன்னர்களுக்கும் செய்தி அனுப்பினான்.



சுயம்வரங்கள் மூன்று வகைப் படும். ஒன்று பந்தயம் வைக்கப் படுவது. மற்றது பெண்ணின் விருப்பப்படி மணமகனைத் தேர்ந் தெடுப்பது, மற்றது பணம் பொருள் கொடுத்து வரிப்பது. சசிகலாவின் சயம்வரம் இரண்டாவதாகக் கூறப்பட்ட விதத்தில் ஆனது.

அந்த சுயம்வரத்திற்கு பல நாடுகளிலிருந்து அரசகுமாரர்கள் வந்து சேர்ந்தார்கள். அப்போது சுதர்சனன் இல்லாதது கண்டு சசிகலா ''இவர்களெல்லாம் வந்து என்ன பயன்? என மனதிற்குப் பிடித்துப் போன சுதர்சனன் வரவில்லையே'' எனத் தன் தோழியிடம் கூறினாள்.

அந்தத் தோழியும் ''கவலைப் படாதே. நான் இப்போதே போய் உன் தாயாரிடம் உன் மனதில் உள்ளதைக் கூறுகிறேன். உன் தாயார் கண்டிப்பாக உன் விருப்பத்தை நிறைவேற்றுவாள். ஒரு தாயார் தன் மகளின் விருப்பத்தை நிறைவேற்றாமல் இருக்கவே மாட்டாள். எனவே நான் உன் தாயாரிடம் உன்னைப் பற்றிச் சொன்னதும் உடனே சுதர்சனனை அழைத்து ஏற்பாடு செய்யப்படும்'' எனக் கூறி விட்டு அரசியைக் காணச் சென்றாள்.

அந்தத் தோழி அரசியிடம் போய் சசிகலாவின் விருப்பத்தைக் கூற அரசியும் அரசனிடம் "கேட்டீர்களா! நம் சசிகலா சுதர்சனனையே மணக்க விரும்புகிறாளாம். இது முன்பே தெரிந்திருந்தால் இந்த சுயம்வரத்திற்கே ஏற்பாடு செய்யாமல் பேசாமல் அவனுக்கு இவளைக் கல்யாணம் செய்து வைத்திருக்கலாமே" என்று கூறினாள். சசிகலாவின் தந்தையோ ''சுதர்சனனா! நாட்டை இழந்து பரதேசி போல சாப்பாட்டிற்குக் கூட இல்லாமல் காடுகளில் அலைந்து திரிகிறானே. அவனுக்கா என் பெண்ணைக் கொடுப்பது? நீயாவது உன் மகளுக்கு இதை எடுத்துச் சொல்" என்று தன் மனைவியிடம் கூறினான்.

அரசியும் தன் மகளிடம் ''சசிகலா, அந்த சுதர்சனன் திக்கற்றவன். காடுகளில் சாப்பாடு கூட இல்லாமல் அலைந்து திரிகிறானும். அயோத்தியின் மன்னனான சத்துருஜித் அழகானவன். அறிவாளி. அதே சுதர்சனனின் தம்பியும் கூட. உனக்கு மிகவும் பொருத்தமானவன். மேலும் அந்த சுதர்சனனின் தாத்தாவை இந்த சத்துருஜித்தின் தாத்தா கொன்று விட்டான். சந்தர்ப்பம் கிடைத்தால் அவன் சுதர்சனனையும் கொன்று விடுவான். எனவே நீ சுதர்சனனை மணக்கும் எண்ணத்தை விட்டு விடு'' என்றாள்.





# சோமன் திருந்தினன்!

**ரா**மன் தன் மகன் சோமனுக்கு கல்யாணம் செய்து வைக்க எண்ணினன். ஆனல் சோமனுக்குப் பெண் கொடுக்க யாரும் தயாராக இல்லே. ஏனெனில் அவன் வேலே வெட்டி இல்லாமல் திரிந்து சில திருட்டுகளேயும் செய்து வந்தான். இதனல் ராமன் மனம் நொந்து அவனே வீட்டை விட்டு வெளியேற்றி விட்டான்.

சோமனும் தன் ஊரை விட்டு வேறு ஊருக்குப் போனன். தனக்குக் கொஞ்சம் பணம் வேண்டும் என்பதற்காக அவன் ஒரு வீட்டில் திருடப் போனன். அந்த வீடு பொன்னம்மாள் என்ற விதவையினுடையது. அவளுடைய ஒரே மகள் மங்கம்மா. அவளுக்குக் கல்யாணம் ஆகவில்லே.

அவள் தன் மகளுக்கு தங்க நகைகள் செய்து பெட்டியில் பத்திரமாக வைத்திருந்தாள். அது சோமன் கண்ணில் பட்டு விட்டது. அதை அவன் திருடிக் கொண்டு அவ்வீட்டை விட்டு வெளியேறி ஊருக்கு வெளியே உள்ள மலேக் கோவிலுக்குப் போய் அங்கே ஓரிடத்தில் குழி பறித்து புதைத்து வைத்தான். தன்னே யாரும் அடையாளம் கண்டு கொள்ளாமல் இருக்க சன்னியாசி வேஷம் போட்டுக் கொண்டான்.

மறுநாள் மங்கம்மா பூக்களே கட்டி விற்க அடுத்த ஊர் சந்தைக்குக் கிளம்பினள். மங்கம்மா மீது அவ்வூர் போக்கிரி பொன்னய்யன் ஒரு கண் வைத்திருந்தான். அவன் அவளேத் தனக்குக் கல்யாணம் செய்து கொடுக்குமாறு பொன்னம்மாளிடம் கேட்டுப் பார்த்தான். ஆனல் பொன்னம்மாவோ மறுத்து விட்டாள்.

பார்வதி ராமகிருஷ்ணன்



அதனால் ஆத்திரம் கொண்ட பொன்னய்யன் எப்படியாவது மங்கம்மாவைத் தான் அடைந்து விடுவது எனத் தீர்மானித்துக் கொண்டான். மாலை வேளையில் மங்கம்மா சந்தையிலிருந்து திரும்பி வந்த போது ஊர் எல்லையில் பொன்னையன் தன் சில சகாக்களைச் சேர்த்துக் கொண்டு மடக்கித் தூக்கிக் கொண்டு மலைக் கோவிலுக்கு எடுத்துச் சென்றான்.

இதையெல்லாம் சன்னியாசி போலத் திரிந்த சோமன் பார்த்து விட்டான். அவன் மங்கம்மாவைக் காப்பாற்றத் தீர்மானித்து பொன்னையன் அருகே போய் ''என்னடா தம்பி இந்த ரகளை?'' என்று கேட்டான். பொன்னையனோ ''யாரடா நீ தாடிச் சாமியார்?!'' என்று உறுமினான்.

சோமன் பொன்னையன் முகத்தைக் கூர்ந்து பார்த்து விட்டு ''ஆகா நீதான் எவ்வளவு பெரிய அதிர்ஷ்டசாலி! நீ தொட்டது துலங்கும். பொன்னாகும். இப்போதே நீ நிற்கும் இடத்தின் கீழே தோண்டிப்பார். தங்கம் கிடைக்கும்'' என்றான். பொன்னையனும் தோண்டிப் பார்க்கவே அங்கு சோமன் புதைத்து வைத்திருந்த நகைகள் அவனுக்கு அகப்பட்டன. அதை அவன் எடுத்துக் கொண்டு சோமனை வணங்கி ''சாமி. நீங்கள் உண்மையிலே சக்தி வாய்ந்த மகான்'' என்றான்.

அப்போது சோமன் ''இன்னொரு விஷயம். போயும் போயும் நீ இந்தப் பெண்ணை ஏன் தூக்கி வந்தாய்? இவளை அடைபவன் மூன்றே நாளில் எமலோகம் போய் விடுவான். இவள் துரதிஷ்டம் பிடித்தவளாயிற்றே'' என்றான். அதைக் கேட்ட பொன்னையன் ''அப்படியா? இனி இவள் இருக்கும் பக்கம் கூடப் பார்க்க மாட்டேன்'' எனக் கூறியவாறே நகைகளோடு போய் விட்டான்.

மறுநாள் சோமன் பொன்னம்மாவின் வீட்டிற்குப் போனான். அப்போது வீட்டில் மங்கம்மா

மட்டுமே இருந்தாள். பொன்னம்மாள் இருக்கவில்லை. அவளிடம் அவன் ''முந்தாநாளிரவு உங்கள் வீட்டில் நகைகள் திருட்டுப் போனதும் நேற்று பொன்னைய்யன் எடுத்துச் சென்ற நகைகள் அவையே என்பதும் உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான். அவள் ''தெரியாதே'' எனவே சோமன் தன் காவி உடைகளைக் களைந்து சன்னியாசி வேஷத்தைக் கலைத்துக் கொண்டு ''முந்தாநாளிரவு நான் இங்கு வந்து நகைகளைத் திருடிக் கொண்டு போய் மலைக் கோவிலில் புதைத்து வைத்தேன். அவற்றையே பொன்னைய்யன் எடுத்துப் போனான்'' என்றான்.

மங்கம்மாவும் ''இனிமேல் நீ திருட மாட்டேன். என்று சத்தியம் செய்தால் நான் உன்னையே கல்யாணம் செய்து கொள்கிறேன்" என்றாள். சோமனும் அப்படியே சத்தியம் செய்து கொடுத்தான். தன் தாயார் வந்ததும் மங்கம்மா நடந்ததையெல்லாம் பொன்னம்மாளிடம் கூறினாள். பொன்னம்மாள் உடனே ஓடி ஊர் மணியகாரரிடம் தன் வீட்டிலுள்ள நகைகளைப் பொன்னைய்யன் திருடிக் கொண்டு போய் விட்டதாகப் புகார் செய்தாள்.

மணியகாரரும் பொன்னைய்யனைப் பிடித்து அவன் எடுத்த நகைகளை வாங்கி பொன்னம்மாளிடம் கொடுத்து விட்டான். பொன்னைய்யனுக்கும் கடுந்தண்டனை விதித்தான். பொன்னம்மாள் தன் மகளை சோமனுக்கு கல்யாணம் செய்து கொடுத்தாள். சோமனும் மங்கம்மாவை அழைத்துக் கொண்டு தன் ஊருக்குப் போனான். தன் தந்தையிடம் ''இதோ பார். நான் திருந்தி கல்யாணமும் செய்து கொண்டு வந்து விட்டேன்'' என்று நடந்ததைக் கூறி நமஸ்கரித்தான். ராமனும் தன் மகனையும் மருமகளையும் வீட்டிற்குள் அழைத்துப் போனான்.






# நிறம் மாறிவிடும்!

**மோ**கபுரி அரசகுமாரியின் அழகைக் கேள்விப்பட்டு பல அரசகுமாரர்கள் அவளை மணக்க முன் வந்தார்கள். அரசகுமாரியின் தந்தை அவர்களில் மணிபுர அரசகுமாரனுக்குத் தன் மகளைக் கல்யாணம் செய்து கொடுக்க விரும்பினான். ஏனெனில் அவன் எல்லா நற்குணங்களையும் கொண்டவன். அவனுக்குத் தன் தந்தையின் நாடோடு தாய்வழிப் பாட்டனின் நாடும் கிடைக்க இருந்தது.

மணிப்பூர் அரசனுக்கு ஒரே ஒரு குறை சொல்ல வேண்டும் என்றால் அவனது கருப்பு நிறத்தைத்தான் கூற முடியும். பிறந்த போது அவன் நன்றாகத்தான் இருந்தான். ஆனால் சில வருடங்களுக்கு முன் வேட்டைக்கு அவன் போன போது ஏதோ ஒரு பாம்பு கடித்தது. அவனை வைத்தியர்கள் பிழைக்க வைத்து விட்டார்கள் என்றாலும் அவனது உடல் மட்டும் சற்றுக் கருத்து விட்டது. அவனது முந்தைய நிறம் வர சில வருடங்கள் பிடிக்குமாம்.

மோகபுரி அரசகுமாரி மோகனாங்கிக்குக் கருப்பு நிறம் என்றாலே பிடிக்காது. எனவே அவள் ஒரே பிடிவாதமாக ''மணிப்பூர் இளவரசன் கருப்பு. அவனை நான் மணந்து கொள்ள மாட்டேன்'' என்று தன் தந்தையிடம் கூறி விட்டாள். அரசனோ ''கருப்பாய்ப் பிறந்தவர்களும் மனிதர்கள்தாமே. அதுவும் இவனோ குணத்தில் தங்கக் கம்பி. இப்படிப்பட்டவனைக் கணவனாக அடைய நீ கொடுத்து வைத்திருக்க வேண்டும்'' என்றெல்லாம் சொல்லிப் பார்த்தான். ஆனால் மோகனாங்கியின் பிடிவாதம் சற்றும் தளரவில்லை.

இந்திரஜால வித்தையாளர் ஏ. சி. சர்க்கார்

மறுநாள் மந்திரி அவள் அறைக்கு வந்து ''நிறம் என்பது நம் கண்களுக்குப் படும் ஒரு பிரமை எனக் காட்டுகிறேன் பார்'' எனக் கூறி கை தட்டினுன். அப்போது வேலைக்காரன் ஒரு தட்டில் ஏதோ ஒன்றைத் துணியால் மூடிக் கொண்டு வந்து ஒரு மேஜை மீது வைத்தான். மறு பக்கத்திலிருந்து அரசனும் அரசியும் வந்தனர்.

மோகனங்கி மந்திரியிடம் "இது என்ன?'' என்று கேட்க அவரும் ''இதில் ஒரு கண்ணுடி டம்ளரில் கரண்டிகள் உள்ளன. அதில் நம் இந்திரஜாலவித்தைக்காரர் ஊற்றி மந்திரித்த நீர் உள்ளது. உள்ளே கரண்டி ஒன்று ஒளி மங்கிக் கிடக்கிறது. அதை எடு'' என்று அவளிடம் சொன்னுர்.

அவளும் ஒளிமங்கிய கரண்டியை வெளியே எடுத்தாள். அப்போது மந்திரி "டம்ளரில் உள்ள பளபளக்கும் கரண்டியை எடு'' என்றுர். மோகனங்கி அதை வெளியே எடுத்ததும் அது ஒளிமங்கி கருப்பாகி விட்டது. மந்திரி மறுபடியும் அதனை அந்த டம்ளர் தண்ணீரில் போடும்படி மோகனங்கியிடம் சொன்னுர். அவள் தண்ணீரில் போட்டதும் அந்தக் கரண்டி பளபளவென்று மின்னியது.

அப்போது மந்திரி ''பார்த்தாயா? கருப்பு நிறப் பொருள்கள் கூட சில மாறுதல்களால் பளபளப்பாகி விடுகின்றன. நிறம் என்பது நம் பார்வையின் அடிப்படையில் தெரிவது. அது அதனுடைய இயல்பான குணம் அல்ல. இது போலத்தான் மணிப்பூர் அரசகுமாரனின் நிறமும்'' என்றுள்.

மோகனங்கியும் உடனேயே மணிப்புர அரசகுமாரனை மணக்கச் சம்மதித்தாள். அவனது கருப்பு நிறமும் சில வருடங்களில் மறைந்தும் போயிற்று. மந்திரி மோகனங்கியின் மனதை மாற்ற டம்ளரில் வைத்த நீர் விசேஷ அமிலம் கலந்தது எனக் கூறவும் வேண்டுமோ.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1979 ஆகஸ்ட் மாத இதழில் வெளியிடப்படும்**







P. Sundaram P. Sundaram

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

★ ஜூன் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.

★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## ஏப்ரல் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **எட்டப் பார்த்தால் என்ன தெரியும்?**
இரண்டாவது போட்டோ : **எட்டிப் பார்த்தால் என்னைத் தெரியும்.**

பரிசு பெற்றவர் : **சியாமளா ஜெயபாலன்,**
165, மகாதானத் தெரு, மாயூரம்.

பரிசுத் தொகை ரூ. 25 ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

**Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop. of Chandamama Publications) 2 & 3, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor : NAGI REDDI.**

**BAND-AID**
BRAND
Dressings

# வேடிக்கை 'விளையாட்டு'ப் போட்டி

## 501 அழகான 'ஏர்-பேக்'குகள் வெல்க

வேறுபாட்டைக் கண்டுபிடிக்கவும்





**போட்டியில் பங்குபெறுவது எப்படி.**

மேலுள்ள இரண்டு படங்களுக்கு மிடையில் ஏழு வேறுபாடுகள் உள்ளன. அவற்றைக் கண்டுபிடியுங்கள். ஒவ்வொரு வேறுபாட்டையும் பேனாவால் வட்டமிட்டுக் காட்டுங்கள். பின்னர் உங்கள் பெயரையும் முகவரியையும் எழுதி, இந்தப் பக்கத்துடன் இங்கே காட்டியுள்ள பாண்ட்—எய்ட் டிரஸ்ஸிங்குகளின் ஒரு பெட்டியுடன் இணைக்கவும்:

உங்கள் நுழைவுத்தாளை விரைந்தனுப்ப வேண்டிய முகவரி:

தபால் பை எண் 11491
பம்பாய் 400 020

**501 கவர்ச்சியான பரிசுகள்**

எமது அலுவலகத்துக்கு வந்து சேரும் முதலாவது 501 முற்றிலும்-சரியான நுழைவுத்தாள்கள் அனுப்பிய ஒவ்வொருவருக்கும் ஓர் அழகான 'ஏர்-பேக்' வழங்கப்படும். எனவே முந்துங்கள்! நுழைவுத் தாள்கள் வந்து சேரவேண்டிய கடைசித் தேதி ஜூன் 30, 1979.

தீர்ப்பாளர்களின் தீர்ப்பே முடிவானது; கட்டுப்படக்கூடியது இதுபற்றி எவ்வித கடிதப்போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப் படமாட்டாது.




Johnson & Johnson
LIMITED



OBM 1480-Tam (c)

DADDY MUMMY AND...




# அவை யாவற்றையும் எக்கோ ஸ்கெட்ச் பேனாவினால் வரைந்திருக்கிறேன்

# EKCO

## ஸ்கெட்ச் பேனா

வண்ணங்கள், சின்னஞ்சிறிய குழந்தைகள் விரும்பும் பலவித வண்ணங்கள் ட்ராயிங் என்றால் அவர்களுக்கு மிகவும் விருப்பம். உங்கள் குழந்தையிடம் மறைந்துள்ள திறமையை பரிமளிக்கச் செய்யுங்கள். எக்கோ ஸ்கெட்ச் பேனாக்கள் கொண்ட கவர்ச்சிகரமான பையை அவனுக்கோ/ அவளுக்கோ பரிசாகக் கொடுங்கள். அவை கண்கவர் வண்ணங்களில் கிடைக்கின்றன.

EKCO
SKETCH PEN
FOR
SKETCHING
COLOURING • SIGNING

விநியோகஸ்தர்: கிரோன் & கோ.
73/75 ஷாம்ஷெட் ஸ்ட்ரீட்,
பம்பாய் 400 002. டெலி: 324432

**எக்கோ ஸ்கெட்ச் பேனாவினால் வரைவதே அலாதி இன்ட்ம்.**

ADVERTS/WP/216/TA/G8

AMBULIMAMA (Tamil)
JUNE 1979
PRICE IN SRI LANKA
Rs. 1.25 Ps.
Regd. No. M. 4863
Registered as a Newspaper in Sri Lanka

# பாப்பின்ஸ் காகிதத்தில் கைவண்ணம்

## உங்கள் நண்பர்கள் ராசுவும் வாசுவும்

**உங்களுக்குக் கற்பிப்பர்
காகிதத்தில் கைவண்ணம்
காட்டி நீங்கள் களித்திடவே.**

**தமாஷ் தொப்பி**
ஒரு மடங்கு அகலமும்
1½ மடங்கு நீளமும்,
அதாவது, 51 x 34
செ.மீ. உள்ள காகிதம்.
எடுத்துக் கொள்க.
(செய்தித்தாளின் ஒரு
பக்கமானாலும் போதும்)



செங்குத்தாயுள்ள புள்ளி
களினூடே காகிதத்தை
மடித்து மீண்டும்
விரிக்கவும். இப்போது
மீண்டும் இரண்டாக,
மற்ற புள்ளிகளினூடே,
அம்புக்குறி காட்டும்
திசையில் மடிக்கவும்.



நடுவை நோக்கி
மடிக்கவும்.





கீழேயுள்ள 2 துண்டுகளை
மேற்புறம் மடிக்கவும்—
ஒன்று ஒரு பக்கம்,
மற்றொன்று மறு பக்கம்.
தொப்பி தயார். தமாஷாக
அணிந்து சிரியுங்கள்.














பார்லே

# பாப்பின்ஸ்

பழரச மிட்டாய்கள்
சொக்கும் இன்பம்...
சொட்டும் இனிமை...பலே ஜோர்

5 பழரசச் சுவைவகைகள்—
ராஸ்ப்பெர்ரி, அன்னாசி,
எலுமிச்சை, ஆரஞ்சு, சாத்துக்குடி.

everest/78/PP/248-tm